## தூர்வாசபுரம் ஸ்ரீ பாதாளேச்சுவரர்

# திருக்கோவில் பூசை மரபுகள்

(வரலாற்றுடன்)



# தூர்வாசபுரம் ஸ்ரீ பாதாளேச்சுவரர்
# திருக்கோவில் பூசை மரபுகள்

(வரலாற்றுடன்)

ரெ. சண்முகவள்ளி எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்.,
தமிழாசிரியை
ஜீ.ஆர்.எம். பெண்கள் மேல்நிலைப்பள்ளி
திருவாரூர்

**தட்சிணாமூர்த்தி பதிப்பகம்**
2, வடக்குமட விளாகம்
திருவாரூர்-610002
Ph: 243224

## Biblio Graphical Data


| | | |
|---|---|---|
| Title | : | **Poojas in Temples of Thurvasapuram Pathaleeswara Temple** |
| Author | : | **R.Shanmugavalli** |
| Publisher | : | **Dakshnamurthi Pathippagam**<br>2, Vadakku Mada Vilaagam,<br>Thiruvarur-2<br>Ph: 243224 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Size of the Book | : | 1/8 Demi |
| No. of Pages | : | 120 |
| Price | : | Rs. **40/-** |
| Subject | : | Religious |
| Copy Right | : | Author© |
| Designed & Printed By | : | **Sivaa Graphics**, Ch-94.<br>Ph: 9282152070 |

முனைவர் தெ.சொக்கலிங்கம் எம்.ஏ., பி.ஓ.எல்., பியெச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்–முன்னைத்துறைத் தலைவர்
தமிழ்த்துறை–அழகப்பா பல்கலைக் கழகம்
இயக்குநர், டாக்டர் தெ.பொ.மீ. தமிழாய்வு மையம்,
காரைக்குடி–3
சிறப்பாசிரியர்: பூச்சரம்–சென்னை வழங்கிய

# அணிந்துரை

*அழகப்பா பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் முதுகலை தமிழ் வகுப்புச் சிறப்புப் பாடமாகக் 'கோயிற் கலை' (Temple Arts) வைக்கப்பட்டது. இதன் தொடர்ச்சியாகக் கோயிற் கலைப் பட்டயம் என்ற வகுப்பும் தொலைதூரக் கல்வித்துறையில் நிறுவப்பெற்றது. இவற்றின் தேவையையும் சிறப்பையும் உணர்ந்து அந்நாள் துணைவேந்தர் கலையன்னை டாக்டர் (திருமதி) இராதா தியாகராசன் அவர்கள் தக்க நடவடிக்கை எடுத்தார்கள். இதனையொட்டி அழகப்பா பல்கலைக் கழகத்தில் தேசிய அளவில் திருக்கோயிற் கருத்தரங்கும் நடத்தப்பெற்றது. பல் வகையானும் இப்பல்கலைக் கழகத்தில் கோயிற்கலை ஆய்வு செழித்தது. முதுகலை வகுப்பின் நிறைவுத் தேர்வுக்கு, மாணாக்கர் ஒவ்வொருவரும் ஒரு கோயிலை ஆராய்ந்து நூறுபக்க அளவில் ஓராய்வேடு பணிக்க வேண்டும் என்ற விதி அமைக்கப் பெற்றது. இதனால் மாணாக்கர்கள் கோயிலை ஆராயும் புலமை பெற்றனர்; இரண்டாவது அவர்கள் தமிழில் ஒரு பொருள் குறித்துத் தொடர்ந்து எழுதும் வல்லமையும் எய்தினர். செட்டிநாட்டையும் அதன் சுற்றுப்புறங்களிலும் விளங்கும் நூற்றுக்கு மேற்பட்ட சிவன் கோயில், திருமால் கோயில், காளி கோயில், அய்யனார் கோயில்- என்று பல கோவில்களும் ஆராயப்பட்டு ஆய்வேடுகளாக வரலாறுகளும் சிந்தனைகளும் பதிவு செய்யப்பட்டன. இத்தகைய ஆய்வேடுகள் பல அழகப்பா பல்கலைக் கழகத் தமிழ்த் துறையிலுள்ளன இவற்றில் அச்சானவை மிகச் சிலவே.*

*திருக்கோவிலாய்வேடுகளுள் பாராட்டத்தக்கதும் முதன்மை யானதுமான ஆய்வேட்டை எழுதியவர் திருமதி ரெ.சண்முக வள்ளி. அவர் திருக்கோவிலையும் திருமுறையையும் போற்றும் தமிழ்க் குடும்பத்தில் தோன்றியவர். அவர் முதுகலை வகுப்பில் பயின்ற காலை எழுதிய ஆய்வேடு தூர்வாசபுரம் (திருமா)*

பாதாளேச்சுவரர் திருக்கோவில் என்பதாகும். அந்த ஆய்வேட்டைப் புதுக்கியும் மாற்றியும் திருத்தியும் செவ்வனே உருவாக்கி இப்போது நூலாக்கியுள்ளார். ஒரு தனிக்கோவிலாய் வாக இந்நூலை ஆக்காது, திருக்கோவில் காட்டும் மரபு, வழிபடும் மரபு போன்ற பொது அடிப்படைகளைச் சொல்லியும் ஒப்பிட்டும் நூலை அணியப்படுத்தியிருக்கிறார். திக்கோவில் வரலாற்றைக் கோவில் வழிபாட்டு மரபாக எழுதியிருப்பது மகிழ்ச்சிக்குரியது.

பல்வேறு நுட்பமான செய்திகளை மேற்கோளுடன் திருமதி சண்முகவள்ளி எடுத்துக் காட்டுவது அவர்தம் நுண் மாண்புலமையை உணர்த்துகிறது. தமிழறிவும் புலமை நயமும் வெளிப்படுத்தும் இந்நூல் கோவிலாராய்ச்சியாளருக்கு நல்விருந்தாகும். கட்டடக் கலைச் செய்திகளைச் சுட்டிக்காட்டுவதுடன் சமூகவியல் நோக்கிலும் இவர் 'கருத்துகளை எழுதியிருப்பது வரவேற்கத்தக்கது. ஒரு பாண்டியர் காலக் கோவிலின் பெருமையையும் இயல்பையும் இந்த நூல் திறம்பட வெளிப்படுத்துகிறது. ஒரு நூலைப் படித்து முடித்ததும் பல புதிய செய்திகளையோ கருத்துகளையோ அறிந்து கொண்டோம் என்ற மன நிறைவு ஏற்பட வேண்டும். அத்தகைய மன நிறைவு இந்நூலைப் படித்து முடித்ததும் ஏற்படுகிறது. நூலாசிரியருக்கு நம்முடைய பாராட்டுகள்.

ஆசிரியர், சில வடசொற்களைக் கருத்துத் தெளிவிற்காகப் பயன்படுத்தியிருக்கிறார். தெளிவான நடையும் சிறுசிறு சொற்றொடர்களும் ஆற்றொழுக்கான கருத்தோட்டமும் நூலைப் படிக்கத் தூண்டுகின்றன. இது நல்ல நூல்; இனிய நூல். தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள் ஒவ்வொருவரும் படிக்கத் தக்க நூல்; படிக்கவேண்டிய நூல்.

இந்நூல் ஆராயும் கோவில் பற்றி இந்நூலாசிரியருக்குக் கிட்டாத செய்தி, இப்போது கிடைத்துள்ளது. தூர்வாசபுரம், துறுமா, திருமா, துருவாசபுரம் என்பன அனைத்தும் ஓர் ஊரையே குறிக்கும் பெயர்கள். இங்கு எழுந்தருளிய ஸ்ரீ சகஜரி உடனாய ஸ்ரீ பாதாளேசுவரர் திருக்கோவிலை வயிரவன்கோவில் என்றே மக்கள் அழைப்பர். செட்டி நாட்டிலுள்ள அஷ்ட பைரவத்தலங்களில் ஒன்றாக இங்குள்ள வயிரவர் எண்ணப் பெறுகிறார். இன்றைய அறநிலையத் துறை ஆவணங்கள், சிவபெருமான் பெயரைச் 'சுந்தரேசர்' என்றுரைக்கின்றன. புதுக்கோட்டை சமஸ்தான மன்னர் விசயரகுநாதத் தொண்டைமான், தூர்வாசபுரத்திலுள்ள நிலத்தில் மூன்றில் இரண்டு பங்கை இக்கோவிலுக்குக் கொடுத்துள்ளார்; எஞ்சிய ஒரு பங்கைக் காசி (பனாரஸ், வாரணாசி) விசுவேசுவரர்க்கும் விசாலாட்சிக்கும் அபிஷேகம், நைவேத்தியம், அன்னதானம் ஆகியவற்றை நடத்தக்

காசிவாசித்தில்லை நாயகத் தம்பிரான் வசம் கொடையாக வழங்கியிருக்கிறார். இத்தம்பிரான் தருமபுரம் திருஞான சம்பந்த பண்டாரச் சன்னதியின் சீடர்.

இந்த கொடை விவரம் செப்பேட்டில் பொறிக்கப்பட்டிருக் கிறது. இது விசயரகுநாதத் தொண்டைமானால் 22.07.1732–இல் வழங்கப் பெற்றது. இச்செப்பேடு 28 செ.மீ. நீளமும் 19.5 செ.மீ. அகலமும் கொண்டது; செப்பேட்டின் இருபுறமும் வாசகங்கள் எழுதப் பெற்றிருக்கின்றன. செப்பேட்டின் தொடக்கத்தில் சிவலிங்கம் நின்ற கோலத்தில் அம்மையுடன் காட்சி தருகின்றது. சந்திர சூரியன் உருவங்களும் முத்தலைச் சூலமும் நந்தியும் ராமஜெயம் என்ற தெலுங்குச் சொற்றொடரும் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளன. (தமிழ்நாட்டுச் செப்பேடுகள் (2002) ப. 228) எனவே கி.பி. 1732க்கு முன்னரே இங்குத் தருமபுரம் மடம் அல்லது வேறு ஒரு மடம் இந்திருக்கிறது. கி.பி. 1303இல் காசி திறம் ரா.சடையப்பத் தம்பிரான், வைத்தியலிங்கத் தம்பிரான் என்று இருவர் திருக்கோயில் திருப்பணி செய்திருக்கின்றனர். இவர்களே வயிரவரைப் பிரதிட்டை செய்தவர்கள். தொடர்ந்து இருந்து வந்த மடத்திலேயே கி.பி. 1732இல் தில்லைநாயகத் தம்பிரான் இருந்திருக்கிறார். இன்று மடம் இருந்த அடை யாளமோ பிற அடையாளங்களோ திருமாவில் கிடைக்கவில்லை.

தட்சிணாமூர்த்தி சந்நிதியில், காசி விசுவநாதர்- விசாலாட்சி சிலைகள் உள்ளன. இவை இத்தம்பிரான்களால் காசியிலிருந்து கொண்டு வரப்பெற்றிருக்க வேண்டும். தூருவாசபுரம் செப்பேடும் காசியிலுள்ள மடத்திலேயே இருப்பது கருதத்தக்கது. திருமா வயிரவர் சிவன் கோவில் கட்டிச் சுமார் இருநூறு ஆண்டு களுக்குப் பின் வைத்திலிங்கத் தம்பிரானால் பிரதிட்டை செய்யப் பெற்றது. எனவே காசி கபால வயிரவரைக் கருத்திற் கொண்டே திருமா வயிரவரும் பிரதிட்டை செய்யப் பெற்றிருக்கிறார் என்பது புலனாகும்.

தெய்வீக ஆற்றல் மிக்க இத்திருக்கோயிலை ஆராய்ந்து எழுதிய திருமதி சண்முக வள்ளியைப் பாராட்டுகிறேன்; தொடர்ந்து தமிழிலக்கியங்களையும் கோவில்களையும் ஆராய்ந்து நயமிக்க நன்னூல்களை ஆசிரியர் படைப்பாராக!

வாழ்க வளமுடன்

தெ.சொக்கலிங்கம்
24.8.2004

சிவ. கேதாரகௌரி எம்.ஏ., பி.எட்., எம்.ஃபில்.,
செயலர், ஸ்ரீ ஜி.ஆர்.எம். கல்வி முகவாண்மை,
திருவாரூர்

## வாழ்த்துரை

"எரியும் விளக்காயிரு
அப்போது தான்
மற்ற விளக்குகளை
ஏற்றி வைக்க முடியும்"

என்றார் கவிஞர் தாகூர்.

அறிவுக் கண் திறக்கும் ஆசிரியையாக இருந்து கொண்டு, வெகு தூரத்தில் உள்ள ஓர் ஊரைப் பற்றியும் அவ்வூர் கோயிலைப் பற்றியும் ஆய்வு செய்தல் என்பது மிகவும் வியக்கத்தக்க அற்புத பணியாகும். அந்த வகையில் இவ்வாய்வாளரை முதற்கண் நெஞ்சார வாழ்த்துகிறேன்.

முடியுடைய முவேந்தர்கள் காலத்தில் கண்ணெனப் போற்றப்பட்டது கட்டிடக் கலையாகும். குறிப்பாக பாண்டியர் களாலும் சோழர்களாலும் செழுமைப் படுத்தப்பட்டது. கட்டிடக் கலையாகும். தமிழகத்தி னுடைய கலை மற்றும் பண்பாட்டின் உறைவிடமாக விளங்குகிற. இசை மும்மூர்த்திகள் பிறந்த திருவாரூரில் பணியாற்றி வரும் இவ்வாய்வாளர் பெரிதும் முயன்று இவ்வாய்வை மேற்கொண்டிருக்கிறார்.

பாண்டியர் திருக்கோயிற் சிலைகள், அமைப்பு, மரபுகள் பற்றிய விரிவான ஆய்வு நூல்கள் இதுகாறும் வரன்முறைப்படுத்தித் தமிழிலோ ஆங்கிலத்திலோ எழுதப்பட்டில. பல்லவர் பாணி, சோழர் பாணி என்பது போலத் தனித்தன்மையுடைய பாண்டியர் பாணி யாதென்று அறிஞர் பெருமக்கள் அடையாளம் கண்டு எழுதிலர் - பாண்டியர் நாட்டில் பல கோவில் கள் இருந்தும் அவை ஆராயப்பெறாமல், பாண்டியர்

பணி அடையாளங் காணப்படவில்லை என்று எழுதி தன் ஆதங்கத்தையும், தனது வேட்கையையும் வெளிப்படுத்துகிறார். இந்நூலின் வழியாக பாண்டியர்களின் கலை போக்கு மற்றும் ஒரு கோயில் ஊருக்கு எத்திசையில் இருக்க வேண்டும். தெய்வங் களின் திருமேனி எப்படி அமைய வேண்டும், பூசை என்னும் கிரியைகள் என்பன யாது. என்பன போன்ற பல கோணங்களில் ஆராய்ச்சி செய்திருக்கிறார். மேலும் பல நெறியாளர்கள். தகவலாளிகள், ஆய்வாளர் கள் மற்றும் சிவாச்சாரியார்கள் ஆகியோர்களின் வழிகாட்டுதலோடும் திருக்கோயில் மண்டபத்திலுள்ள கல்வெட்டுகளின் துணையோடும் இவ்வாய்வை மி கவும் சிரமப்பட்டு செய்து ஆய்வினை ஏழு இயலாகப் பிரித்து ஆய்வு செய்து நமக்கு அளித்திருக்கிறார்.

இவ்வாய்நூல் ஆய்வாளரின் கடின உழைப்பால் முழுமையான சிந்தனையால் நாம் பாண்டிய கால கலைப்பணி தொடர்பான பல்வேறு செய்திகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்கிறோம். பொருத்தமான வார்த்தைகளைக் கொண்டு ஓர் அரிய ஆய்வை எளிமைப்படுத்தி சொல்லியிருக்கிற ஆய்வாளரின் முயற்சியை பாராட்டுகிறேன். இவ்வாராய்ச்சி நூலை பயிலுவோர் பல புதிய செய்திகளையும் ஆகம சாத்திரங்களையும் வரலாற்று உண்மைகளையும் தமி ழர்தம் கலாச்சாரப் பண்பாட்டுக் கூறுகளையும் அறிந்து பயன்பெறுவார்கள் என்று நம்புகிறேன். ஆய்வாளரின் அரிய இதுபோன்ற முயற்சி மேலும் மேலும் பெருகிட இறைவன் நீண்ட ஆயுளை தந்திடவேண்டும் என்று வாழ்த்துகிறேன்.

திருவாரூர் **சிவ. கேதாரகௌரி**

செல்வி என்.சாவித்திரி எம்.எஸ்ஸி., எம்.ஃபில்., எம்.எட்.,
முதல்வர்: ஆர்.ஏ. பெண்கள் கல்லூரி, திருவாரூர்

# மதிப்புரை

நமது இந்திய கலாசாரத்தில், குறிப்பாகத் தமிழர்களின் வாழ்வில் ஆலய வழிபாடு என்ற பண்பாடு முக்கிய அங்கம் வகிக்கின்றது. இது 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற முதுரைகளிலிருந்து தெளிவாக விளங்குகிறது. தற்காலத்தில் மேற்கத்திய நாகரிக மோகத்தில் சிக்குண்டு தறிகெட்டுத் தடம்மாறி செல்லுகின்ற நமது வாழ்க்கைப் பாதையில் ஆலயங்கள் பற்றிய வரலாற்று முக்கியத்துவமும், அவைகளின் அமைப்பின் சிறப்புகளும், மூர்த்தி, தலம், தீர்த்தம் போன்ற விபரங்களின் மகத்துவங்களும் மறக்கப்பட்டு வருகின்ற இந்த காலகட்டத்தில் திருமதி. சண்முகவள்ளி அவர்களின் திருமாத்திருபாதாளேச்சுவரர் திருக்கோயில் பற்றிய ஆய்வுக் கட்டுரை புத்தக வடிவில் வெளிவருவது, ஆன்மிக ஆர்வலர்களுக்கு ஒரு வழிகாட்டிபோல் விளங்கும் என்பதை நினைத்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன்.

ஆய்வாளர் திருமதி. சண்முகவள்ளி அவர்கள் கோயிலின் தல வரலாற்றைப் பற்றிக் குறிப்பிடுகையில் வரலாற்றுக்கான ஆதாரங்கள் நூல் வடிவில் தகுந்த அளவில் கிட்டி இருந்தால் தனது பணியை இன்னும் சிறப்பாகச் செய்திருக்க முடியும் என்று குறிப்பிட்டுள்ளது, நமது நாட்டின் பல சிறப்புகளும், சிந்தனைச் செல்வங்களும், சீரிய சிறப்பியல்புகளும், மாண்புகளும் வெளி உலகத்துக்குத் தெரியாமல் இருப்பதற்கு நமது நாட்டில் நாம் வரலாற்று ஆதாரங்களைப் பாதுகாக்கவில்லை என்பதையும், வரலாற்றுக் குறிப்புகளை நாம் சேகரித்து வைக்கவில்லை என்பதையும் தெளிவாக்குகிறது. 'திருமா' என்ற ஊர் பூர்வீகத்தில் புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்ததாக இருந்ததை, பல சிறப்புக்களையும் ஒருங்கே பெற்றுத் திகழ்ந்ததை பாண்டிய காலத்துக் கல்வெட்டுக்கள் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது என்கிறார். கோயிலில் உறை தெய்வ மூர்த்தம் சுயம்புவாக தோன்றியதும் என்றும், அதன் தோற்றம், வளர்ச்சி பற்றிய விவரங்களைப் பல கட்டங்களாகப் பிரித்து வரலாற்றுச் சான்றுகளுடன் விளக்கியுள்ளது சிறப்புக்குரியது.

ஆகம முறைப்படி கோயில் அமைக்க வேண்டிய நெறிமுறைகளைப் பற்றியும், அந்நெறிகளின்படி கோயில் அமைந்துள்ளதா என்று கல்வெட்டுகளை ஆராய்ந்து விளக்கி உள்ளது பாராட்டுதலுக்குரியது. ஒவ்வொரு சன்னதியும், எப்படி, எந்த காலகட்டத்தில் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற அவரது முடிவுகள் வரலாற்றுச் சான்றுகளை ஒட்டியே அமைந்துள்ளன.

கோயிலில் சன்னதி கொண்டுள்ள ஒவ்வொரு தெய்வத்திரு மூர்த்தங்கள் பற்றியும், அவைகளின் அமைப்பு, அவைகளின் கலைநயத்தோடு கூடிய சிறப்பு ஆகிய விபரங்களை விரிவாக எடுத்துக் காட்டியுள்ளது அவரது ஈடுபாட்டைக் காட்டுகிறது. உலோகத் திருமூர்த்தி பற்றிய அமைப்பின் விளக்கங்கள் நமது வியப்பையும், ஆர்வத்தையும் கூட்டுவதோடு, இந்த ஆலயத்தைக் கட்டாயம் நமது அகக் கண்ணால் மட்டுமின்றி புறக்கண் வழியாகவும் காண வேண்டும் என்ற ஆர்வத்தையும் தூண்டுகிறது என்றால் மிகையாகாது.

ஆலயங்களில் நடக்கும் கிரியைகளின் வகைகளைப் பற்றியும், திருப்பாதாளேச்சுவரர் ஆலயத்தின் தினசரி பூசைகள் பற்றியும் விவரக்குறிப்புகள் தெளிவாக உள்ளன. அபிஷேகங்களில் உபயோகிக்கும் பொருட்கள், அதனால் விளையும் பயன்கள் பற்றிய பட்டியலும், பலவித மலர்கள், அவைகளின் தன்மை, அவைகளை அர்ப்பணிக்க வேண்டிய நேரம் அதனால் கிட்டும் பலன் என்பது பற்றிய பட்டியலும் வாசகர்களுக்கு பயன் அளிப்பதாக இருக்கும்.

ஆலய பரிபாலனம், பணியாளர்களின் நிதிமூலம் நடைபெறுகிறது என்பதாலும், உள்ளூர் மக்களில் பெரும்பான்மையோர் கூலி வேலை செய்பவர்கள் என்பதாலும், ஆலயத்தின் நிதி ஆதாரம் மிகவும் குறைவாகவே உள்ளது. ஆதியில் புதுக்கோட்டை அளித்து வந்த அதே தொகைதான் இப்போதும் அறநிலையத் துறை அளிக்கிறது என்பது மனதை நெருடுகிறது. அக்காலத்தில் நிர்ணயிக்கப்பட்ட அதே ஊதியம்தான் இப்போதும் பணியாளர்களுக்கு வழங்கப்படுகிறது என்பது மனதுக்கு இதமாக இல்லை.

இந்த வரலாற்றுச் சிறப்புமிக்க இக்கோயிலைப் பற்றிய இந்த ஆய்வுக்கட்டுரை இக்கோயிலை நேரில் காண வேண்டும் என்ற ஆவலை ஆன்மிக ஆர்வலரிடையே தூண்டும் என்று நினைக்கிறேன். ஆசிரியரின் இப்பணிக்கு எனது பாராட்டுக்கள். இதுபோன்ற இவரது பணி சிறக்க எனது வாழ்த்துக்கள்.

இப்படிக்கு<br>
**N. சாவித்திரி**

# முன்னுரை

'தூர்வாசபுரம் ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் பூசைமரபுகள்' என்னும் நூல், தூர்வாசபுரம் ஸ்ரீ சகஜரிநாயகி உடனாய ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் வரலாறு பற்றிய நூலாகும். இக்கோயிலை அடித்தளமாக வைத்துக்கொண்டு கோயில் வரலாறு, அமைப்பு, வழிபாடு ஆகியன குறித்து எழுதப்பட்டிருக்கிறது. கோயில் வழிபாடு பற்றி ஆகமங்கள் சொல்லும் கருத்துகள் ஆங்காங்கே தெளிவாகச் சொல்லப் பட்டிருக்கின்றன;

தெய்வப் பற்றும் தமிழுணர்வும் மிக்க குடும்பத்தில் பிறந்திடும் பேறு பெற்றேன்; பன்னிரு திருமுறைகளை இசையோடு ஓதிடும் அறிவாளர் என் தந்தையார்; அன்புக்கும் அறிவுக்கும் இலக்கணமானவர் என் அன்னையார். என்னைப் பெற்றெடுத்து நற்றமிழ் படிக்க வைத்துக் கண் நிறைந்த கணவனுக்கு மணம் செய்வித்து நல்வாழ்க்கை நல்கிய அப்பெற்றோரை வணங்குவதை யன்றி நன்றி சொல்லச் சொற்கள் எவையுமில. அவர்கள் பல்லாண்டு வாழ ஸ்ரீகமலாம்பிகை உடனாய ஸ்ரீ தியாகராசப் பெருமானைப் போற்றி வணங்குகின்றேன்.

வள்ளல் அழகப்பர் வடிவமைத்த அழகப்பா (அரசு) கல்லூரியில் தமிழ் இளங்கலை வகுப்புப் பயின்றேன்; தொடர்ந்து தமிழ் முதுகலை அழகப்பா பல்கலைக் கழகத்தில் படித்தேன். அங்கு எங்கும் இல்லாத கோயிற்கலை என்னும் பாடத்தைச் சிறப்புப் பாடமாக அமைத்திருந்தனர் அன்றைய துணைவேந்தர் கலையன்னை திருமதி ராதா தியாகராஜன் அவர்கள். கோயிற்கலைப் பாடத்தில் தனி ஆர்வம் காட்டினார்; அதன் காரணமாக 'முதுகலை பட்டயம்' (Diploma in Temple Arts) என்ற ஒன்றைத் தனிப்படிப்பாக அமைத்தார். இப்படிப்பே, முதற்கண் அழகப்பா பல்கலைக் கழகத்தில் தனிப்படிப்பாகத் தொடங்கப் பெற்றது; இப்பட்டயப் படிப்பு வேறு எந்தப் பல்கலைக் கழகத்திலும் இல்லை என்பதும் குறிக்கத்தக்கது. இச்சூழல் எனக்குக் கோவிலைப் பற்றி அறிந்து கொள்ள நல்ல வாய்ப்பாக அமைந்தது. முதுகலை வகுப்பின் இறுதிப் பருவத்தில் ஏதேனும் ஒரு கோவிலைப் பற்றிக் கற்ற கல்வியைத் துணையாகக் கொண்டு ஆய்வெழுதி ஆய்வேடு பணிக்க வேண்டும் என்பது விதி. அதற்கு ஆய்வுப் பொருளாக, 'தூர்வாசபுரம் ஸ்ரீ பாதளேச்சுவரர் திருக்கோயில்' என்பதை ஆய்வுத் தலைப்பாக எடுத்துக் கொண்டேன். புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமெய்யம்

தாலுகா கண்ணனூர் வட்டத்திலுள்ளது இக்கோவில் 'திருமா நாடு' என்றும் 'கானாடு' என்றும் வழங்கும் பகுதியிலுள்ள இக்கோவிலுக்குத் திருமெய்யத்திலிருந்து நடந்தே செல்ல நேரிட்டது. என்னுடைய தந்தையார், இரு சக்கர வாகனங்களிலேயே கூட்டிச் சென்றிடக் கோவில் பற்றிய கள ஆய்வை மேற்கொண்டேன். திருக்கோவில் சிவாச்சாரியாரும் மெய்காவலரும் இன்முகம் காட்டி நன்முறையில் உதவினர். அனைவர் ஒத்துழைப்பாலும் உருவானதே இந்நூல்.

முதுகலை ஆய்வேட்டைத் தேர்வாளர்களும் பிறரும் பாராட்டினர்; ஆய்வேடுகளில் இதுவே கூடுதலான மதிப்பெண் பெற்றது. ஆய்வேட்டை நூலாக்க வேண்டும் என்று பலரும் வலியுறுத்தினர்; குடும்ப வாழ்க்கை, வேலைப்பளு ஆகியவற்றா லும் போதிய நிதி தேவைப்பட்டமையாலும் அதனை நூலாக்க வில்லை; மீண்டும் சில முறை கோவிலுக்குச் சென்று ஆய்வேட்டை முழுமையாகத் திருத்தியும் புதுக்கியும் எழுதினேன். அதன்பின் திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்குப் பொருள் வேண்டித் திட்ட வரைவு அனுப்பினேன். அவர்களும் நிதி உதவி வழங்கிட நூல் அச்சூர்தி ஏறிற்று. இன்று உங்கள் கைகளில் தவழ்கிறது. நிதி வழங்கிய திருமலை திருப்பதி தேவஸ்தானத் தாருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூல் ஆய்வாகவும் வரலாறாகவும் அமைதற்கும் வெளி வருதற்கும் காரண கருத்தா என் பேராசிரியர், கோயிற்கலைச் சித்தர் முனைவர் தே.சொக்கலிங்கம் அவர்களேயாவர். திருக்கோயில்களைப் பற்றி நன்கு அறிந்தும் வழிபாட்டு மரபுகளை முரணறத் தெரிந்தும் ஐயம் எழும்போது தெளிவித்த இப்பெரியாருக்கு நன்றி. ஆய்வு மாணாக்கர்களை நெறிப்படுத்தி யும் சிந்தனைகளை வரன்முறைப்படுத்தி எழுதுதற்குப் பயிற்றுவித்தும் அவர் தந்த ஊக்கமே இந்நூலின் வெளிப்பாடு; இத்தகைய நல்லாசிரியர்கள் உள்ளமையாலேயே கலைமகள் இன்றும் வாழுகிறாள்.

தற்பொழுது ஸ்ரீ.ஜி.ஆர்.எம் பள்ளியில் தமிழ் பட்டதாரி ஆசிரியராகப் பணியாற்றுகின்ற யான், முதுகலையில் எழுதிய ஆய்வேட்டினைப் புத்தகமாக வெளியிட அனுமதி வேண்டும், என்று பள்ளி நிர்வாகத்தினை அணுகிய பொழுது உயரிய சிந்தனைகளையும், சிறந்த பண்புகளையும், செயலிற் செம்மையும் உடைய என் வணக்கத்திற்குரிய ஸ்ரீ ஆர்.எம்.கல்வி முகவாண்மை யின் தாளாளர் சிவ.கேதார கௌரி அவர்கள் இன்முகத்தோடு அனுமதித்ததுடன், என் வேண்டுதலுக்கிணங்க வாழ்த்துரையும் வழங்கினார்கள். அவர்கள் சொற்களால் வாழ்த்தினைப் பெறும் வாய்ப்பினைப் பெற்ற அடியேன் அவர்களுக்கு என்றென்றும் நன்றிக் கடப்பாடுடையவாகின்றேன்.

இப்பணி செவ்வனே நிறைவுற வாழ்த்திய மரியாதைக்குரிய தலைமையாசிரியர் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் வேண்டுதலுக்கிணங்க எனக்கு மதிப்புரை அளித்த போற்றுதலுக்குரிய இராபியம்மாள் கல்லூரியின் முதல்வர் செல்வி என்.சாவித்திரி அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இவர்கள் பல நேரங்களில் என்னை வழிநடத்தியவர்கள்.

என்னையீன்றெடுத்து ஆளாக்கிய அன்னையரை இப்போது நினைக்கின்றேன்; அவரின் ஆதரவும் அன்பும் மறக்கவிய லாதவை; எத்தனை பிறவியெடுத்தாலும் அவர் மகளாகவே பிறக்க வேண்டும். என் உடன்பிறந்து அமரரான அண்ணன், இளைய சகோதரன், இளைய சகோதரி கமலா, உடன் பிறந்தார் அனைவரும் என் வளர்ச்சிக்கு உதவியவர்கள்; எல்லாருக்கும் அன்பு வணக்கங்களும் நன்றியுமுரியன.

பிறந்த வீடு போலப் பெருமை மிகுந்த புகுந்த வீடும் எனக்கு அமைந்தது. அன்பு வடிவான மாமனார்-மாமியார். நினைத்ததை முடிக்கும் கணவன், பண்பாளர், அன்பாளர்; அவர் துணையின் றேல் எக்காரியமும் வெற்றிபெறாது; ஒரு பெண்ணுக்குப் பின்னே அன்புக் கணவர் துணையிருக்கிறார் என்றால் அஃது ஆயிரங்கோடி யானை பலம். அவரைத் துணைவராகப் பெற்றமை என் தவப்பயனே. எல்லாம் வல்ல தியாகேசப் பெருமானை வணங்கி மகிழ்கிறேன்.

பாண்டியர் காலக் கோவிலான இதனைத் திருப்பணிகள், குடமுழுக்குகள் செய்த விவரம் தெரியவில்லை. இவ்வூரில் தருமபுர ஆதீனத்துக்குத் தொடர்புடைய சைவ மடம் இருந்திருக்கிறது. இம்மடத்தில் இருந்தவர்களுக்கும் காசிக்கும் (வாரணாசி) நெருக்கமான போக்கு வரவும் இருந்திருக்கிறது. காசியிலுள்ளது போலக் கபால பைரவர் சந்நிதியை வைத்தியலிங்கத் தம்பிரான், சடையப்பத் தம்பிரான் ஆகியோர் (கி.பி. 1303) உருவாக்கியிருக்கின்றனர். இங்குக் காசியிலிருந்து கொண்டு வரப்பெற்ற விசுவேசுவர் லிங்கமுமுள்ளது. இத்திருத்தலத்தை மீண்டும் ஆராய்ந்தால் பல புதிய உண்மைகள் கிட்டும்.

இந்நூலைச் சிறப்பாக வடிவமைத்துக் கொடுத்த சிவா கிராபிக்ஸ் நிறுவனத்தாருக்கும் நன்றி.

திருவாரூர் — **ரெ.சண்முகவள்ளி**
12.8.2004

உ

*அன்பின் விளக்கமாகவும் பண்பின் சிகரமாகவும்*
*விளங்கி வரும் என் அன்புக்கும் வணக்கத்துக்குமுரிய*
*மாமனார்-மாமியார்*
*திருவடிகளுக்கு இந்த ஆய்வு மலரைச் சூட்டி*
*வணங்குகிறேன்.*



*திருமதி சண்முகவள்ளி*
*திரு பாஸ்கரன்*

# சுருக்க விளக்கம்

*திருமா, துறுமா என்றெல்லாம் எழுதுவது தூர்வாஸ புரத்தையே. அரசு ஆவணங்களிலும் பஞ்சாங்கத்திலும் பத்திரப் பதிவு அலுவலகங்களிலும் 'தூர்வாசபுரம்' என்று குறிக்கப்படு கிறது. மக்கள் 'திருமா' என்பர். எனவே இப்பெயர்தான் பெரிதும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது.*

ஆ.இ. - ஆண்டு இல்லை

பதி. - பதிப்பாசிரியர்

ப. - பக்கம்

பக். - பக்கங்கள்

*இந்நூல் சிவபெருமான் பெயரைத் திருப்பாதாளேச்சுவரர் என்று, கூறுகிறது. கோவிலாரும் அரசு ஆவணங்களும் சுந்தரேசுவரர் என்றே எழுதுகின்றன.*

# பொருளடக்கம்

# முதலாமியல்

# முன்னுரை

1.0. ஊரும் பெயரும்

1.1. முனிவர் தொடர்பு

1.2. ஆய்வு நோக்கமும் கருது கோளும்

1.3. ஆய்வுச் சிக்கல்

1.4. ஆய்வுப்பகுப்பு

# முதலாமியல்

# முன்னுரை

## 1.0. ஊரும் பெயரும்

"செங்கயல் நின்றுகளும் செறுவில் திகழ்கின்ற சோதிப்
பங்கயம் நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளேச் சுரனே"

என்று பாமணியிலுள்ள சிவபெருமானைத் திருஞான சம்பந்தர் போற்றிப் பாடுகின்றார். அப்பெருமான் பெயர் பெற்ற சிவன் கோயில், புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் தாலூகா, கண்ணனூர் வட்டத்தில் விளங்கும் திருமாவிலுள்ளது. இவ்வூரை மக்கள் பேச்சு வழக்கிலும் எழுத்து வழக்கிலும் 'திருமா' என்றே கூறுகின்றனர். இப்பெயர் சில கல்வெட்டுகளில் 'துறுமா' என்றும் பொறிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வூரோ புதுக்கோட்டை சமஸ்தான ஆவணங்களிலும் சார் பதிவாளர் அலுவலகங்களிலும் புதுக்கோட்டைப் பஞ்சாங்கத்தி லும் 'தூர்வாசபுரம்' என்றே குறிக்கப் பட்டிருக்கின்றது. கல்வெட்டுகளிலோ 'தூர்வாசபுரம்' என்ற பெயரே இல்லை; தூர்வாச முனிவர் பற்றிய குறிப்பும் கிடையாது. 'துறுமா' என்ற சொல், தூர்வாசர் தொடர்பை இவ்வூருக்கு ஏற்படுத்தக் காரண மாகும்.

## 1.1. முனிவர் தொடர்பு

தமிழகத்தில், திருக்கோயில்கள் பலவும் முனிவர்களொடும் சித்தர்களொடும் தொடர்புபடுத்தப் பெறுகின்றன. திருக்கோளக் குடி குடைவரையில் சிவபெருமானுக்கு இருபுறமும் இரண்டு முனிவர்கள் திகழ்கின்றனர்; பேரையூர் அருகிலுள்ள தேவர் மலை யிலுள்ள கோயிலில் முனிவர் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவ்வண்ணம் முனிவர்களுக்கும் திருக்கோயிலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. பேரையூர் நாகநாத சுவாமி கோயிலில், பாதாள லோகத்திலிருந்து முனிவர்களும் தெய்வங்களும் பங்குனி

மாதத்தில் சிவபெருமான் கருவறைக்கு வந்து பூசை செய்வதாக வும் அவ்வாறு செய்யும் போது துந்துபி முழங்குவது சுனையில் கேட்பதாகவும் வரலாறுள்ளது. அத்தகைய வரலாறு போலத்தான் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலிலும் தூர்வாச முனிவர் தொடர்புபடுத்தப்படுகிறார்.

பாண்டியர்கள் கட்டிய கோயில்களில் சுரங்கம் காணப்படுவது இயல்பாகும். இக்கோயிலிலும் முன் மண்டபத்தில் நிலவறை (சுரங்கம்) உள்ளது. இம்மூர்த்தி சுயம்பு மூர்த்தியாக மூலம் தெரியாத பெருமானாக அருள்புரிகிறார். இந்த இரண்டையும் தொடர்புபடுத்தி இக்கோயில் நாகலோகத்தோடு தொடர் புடையது என்று பேசுகின்றனர்.

இங்குள்ள சுரங்கத்தில், தூர்வாச முனிவர் வாழ்ந்து தவம் புரிவதாகவும் அவர் இறைவனை வணங்குவதாகவும் உரைக் கின்றனர். இவ்வூரில் அதிர்வேட்டு, வாணம் போன்ற பேரொலி எழுப்பும் வெடிகளை யாரும் வெடிப்பதில்லை. அந்தப் பேரோ சைகள் துர்வாச முனிவரின் தவத்துக்கு இடையூறாகும். அம் முனிவரோ முன்கோபி. இம்மரபை மீறி யாரேனும் வெடி வெடித்தால் அவருடைய கைகள் வெடிப்பட்டுச் சிதறி ஊனமாகி விடுகிறது.[1] எனவே இவ்வூரினர் யாரும் இந்த மரபை மீறுவ தில்லை.

## 1.2. ஆய்வு நோக்கமும் கருதுகோளும்

திருமாத்திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில், பாண்டியர் காலக் கோயிலாகும். இங்குள்ள அம்மன் கருவறை தவிர எஞ்சிய கருவறைகள் அனைத்தும் பழமையானவை. திருக்கோயிலின் பழைய அமைப்புச் சிதைக்கப்படாமல் கோயில் அவ்வாறே உள்ளது. அக்கோயிலை விளக்கமுறை ஆய்வாக ஆராய்வதே ஆய்வாளரின் கருதுகோளாகும். இதனால் பாண்டியர்களின் கலைப் போக்குச் சிலவற்றைத் தனிப்படுத்தி அறியமுடிகின்றது.

## 1.3. ஆய்வுச் சிக்கல்

திருக்கோயிலைப் பற்றி விவரம் அறிந்த முதியவர்கள் ஊரில் எவருமிலர். அதனால் தகவலாளிகளின் மூலம் மிகுதியான செய் திகள் கிட்டவில்லை. திருக்கோயிற் பணியாளர்கள், கோயிலில் ஒளிப்படம் எடுத்தலைத் தடுத்துவிட்டனர். திருக்கோயில் அருத்த மண்டபத்திலுள்ள கல்வெட்டைப் படியெடுக்க முயன்று அதனைத் தெளிவாக எடுக்க இயலவில்லை.

இவற்றுக்கு எல்லாம் மேலாகப் பாண்டியர் திருக்கோயிற் கலைகள், அமைப்பு, மரபுகள் பற்றிய விரிவான ஆய்வு நூல்கள் இதுகாறும் வரன்முறைப் படுத்தித் தமிழிலோ ஆங்கிலத்திலோ எழுதப்பட்டில; பல்லவர் பாணி, சோழர் பாணி என்பது போலத் தனித் தன்மையுடைய பாண்டியர்பாணி யாதென்று அறிஞர்கள் அடையாளங் கண்டு எழுதிலர். பாண்டிய நாட்டில், பல கோயில்கள் இருந்தும் அவை ஆராயப் பெறாமல், பாண்டியர் பாணி அடையாளங் காணப்படவில்லை.

பாண்டியரின் கோயில் பாணியைப் பற்றி விரிவான கோட்பாடுகள் பற்றிய நூல்கள் இருப்பின், இவ் ஆய்வு மேலும் வளம் பெற்றிருக்கும். ஆய்வு முன்னேற்றத்தில் எழுந்த சிக்கல் களை ஆய்வாளர், நெறியாளர், தகவலாளிகள், சிவாச்சாரி யார்கள் துணை கொண்டு தெளிவுபெற்று எழுதியுள்ளார்.

## 1.4. ஆய்வுப் பகுப்பு

இந்த ஆய்வேடு, முன்னுரை முடிவுரை நீங்கலாக ஐந்தியல் களைத் தன்னகத்தே கொண்டது. முன்னுரை ஆய்வு தொடர்பான பல செய்திகளைச் செப்பும் முதற் பகுதியாகும்; முடிவுரை ஆய்வைப் பற்றிய சிந்தனைகளைத் தொகுத்துப் பேசும் நிறைவுரையாகும். ஏனைய ஐந்தியல்கள் ஆய்வுப் பொருளைப் பகுத்துக் கொண்டு விவரிக்கின்றன.

இந்த ஆய்வேட்டின் இரண்டாமியல் 'திருக்கோயிலின் தோற்ற மும் வளர்ச்சியும்' பற்றியதாகும். கி.பி. பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய இக்கோயிலில் எழுந்தருளிய சிவபெருமான் சுயம்பு லிங்கம் என்றும் அவர் நெல்லி மரத்தின் அடிப்பகுதியால் விளைந்துருவானவர் என்றும் விளக்கப்பெற்றது: காலந்தோறும் கோயிலில் ஏற்பட்ட மூன்று கால கட்ட வளர்ச்சி இங்குத் தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது. பிற்காலத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் திருப்பணியாலும் இக்கோயில் பொலிவு பெற்றிருக்கிறது. கோயிலின் வளர்ச்சி கால முறைப்படி இவண் விரித்துக் கூறப்பட்டிருக்கிறது.

இவ் ஆய்வேட்டின் மூன்றாமியல் திருக்கோயிலமைப்பை விவரிக்கிறது. திருக்கோயில் ஊருக்கு எத்திசையில் அமைய வேண்டும்? எவ்வாறு அமைதல் வேண்டும்? என்ற வினாக்களை எழுப்பி ஈண்டு விடை தரப்பட்டிருக்கிறது. திருக்கோயில் மூன்று கட்டங்களாக விரிவடைந்தமை, தெய்வங்களுக்குத் திருக்கோயி லில் உரிய இடம், நந்தி, கோஷ்ட தெய்வங்கள், திருச்சுற்றின்

அமைப்பு, விமானச் சிறப்பு என்பன தொடர்பான கருத்துகளும் கூறப்பட்டிருக்கின்றன. திருக்கோயிலமைப்பில், கோயிலின் அக அமைப்பு அன்றிப் புறச் சூழ்நிலையும் விளக்கி எழுதப்பட்டிருக் கிறது.

இந்த ஆய்வேட்டின் நான்காமியல் 'தெய்வத் திருவுருவ அமைதி' என்பதாகும். இவ்வியலில் கோயிலும் உருவமும், படிம வகை, இறைவன் இறைவியர் திருவுருவ அமைதி ஆகியன விளக்கப் பெறுகின்றன. ஒவ்வொரு கடவுளின் திருவுருவ அமைப்பும் அவற்றின் அழகும் ஆகம மரபு தழுவியமையும் தனித் தன்மையும் நன்குஆராய்ந்து எழுதப்பட்டிருக்கின்றன. செப்புத் திருமேனிகளை நன்கு காணும் வாய்ப்பு ஆய்வாள ருக்குக் கிட்டாமையால் அவை பற்றிய குறிப்புகள் குறைவாகவே தரப் பட்டிருக்கின்றன. ஆனால் இங்குள்ள செப்புத் திருமேனிகள் எல்லாம் பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்தவை என்பது அறிஞர் துணிபு.

ஐந்தாமியல் 'திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் கிரியை களை' விளக்கி நிற்கின்றது. பூசை என்னும் கிரியை மூன்று வகையின. நித்திய, நைமித்திக கிரியையே இவ்வியலில் விளக்கப் பெறுகிறது. காமியக்கிரியை பற்றிய செய்திகள் சொல்லப்பட வில்லை. நித்திய பூசை, பண்டுதொட்டு நான்கு கால பூசையே; ஆனித் திருமஞ்சனம், மார்கழித் தரிசனம், சம்பா சஷ்டி ஆகிய விழாக்களே இங்குக் கொண்டாடப்படுகின்றன. திருக்கோயிலில் நிறைய வாகனங்களோ உற்சவரோ இல்லை; சோமாஸ்கந்தர் திருமேனி இங்குக் கிடையாது; எனவே காப்புக்கட்டும் மரபு காணப்படவில்லை. இங்குக் கொண்டாடப்படும் உற்சவங்கள் பக்தோற்சவமேயன்றிப் பிரம்மோற்சவம் அன்று. வழிபாட்டு மரபுகளை விளக்கும் இவ்வியல், கோயிலுக்கும் மக்களுக்குமுள்ள தொடர்பையும் விவரிக்கிறது.

இவ் ஆய்வேட்டின் ஆறாமியல் 'திருக்கோயில் நிருவாகம்' பற்றியது. பாண்டியர் காலக் கோயிலான இக்கோயில் ஊரார் அரவணைப்பில் அரசாளுவோர் துணையோடு சிறந்து விளங்கி யது; திருமெய்யம் கோட்டையைத் தலைமையாகக் கொண்ட அரச மரபினர் மறைவுக்குப் பின், இப்பகுதி புதுக்கோட்டை மன்னர் கையகப்பட்டது. புதுக்கோட்டை சமஸ்தான நிருவாகத்

திலிருந்த இக்கோயில், சுதந்திர இந்தியாவில் இணைந்து இன்று தமிழ்நாடு அரசின் இந்து அறநிலையத் துறையின் கீழ் வருகின்றது. இங்குப் பணிபுரிவோர் பன்னிருவர். வேதமோதுவோரோ தேவாரம் பாடுவோரோ ஈண்டு இல்லை. திருக்கோயிலுக்குத் தேவையான நித்திய நைமித்திகச் செலவுகளுக்குரிய தொகையைப் புதுக்கோட்டை சமஸ்தானக் கோயில் நிருவாகம் என்ற அரசு அமைப்பு வழங்குகிறது. நிருவாகத் தொடர்பான கருத்துகள் இவ்வியலில் இயம்பப்பட்டுள்ளன.

ஏழாமியல் 'முடிவுரை' என்பதாகும். இதன் பின்னர் 'துணை நூற்பட்டியல்' அமைக்கப்பட்டுள்ளது; இதனையடுத்துப் பின்னிணைப்பு வருகின்றது. பின்னிணைப்பில் பேட்டிகள், பல்வேறு அட்டவணைகள், வரைபடம், திருக்கோயிற் கல்வெட்டுகள், ஆகியன தரப்பட்டிருக்கின்றன.

## மேற்கோள் விளக்கம்

1. கி.பி. 1951இல் ஊர் அம்பலகாரர் பேச்சை மீறி வாணம் வெடித்த ஒருவர் கை வெந்து பாதிக்கப்பட்டார். இவரை நெறியாளர் நேரில் பார்த்ததாகத் தெரிவித்தார்.

# இரண்டாமியல்
# திருக்கோயில் தோற்றமும் வளர்ச்சியும்

2.1. திருமாலின் பெருமை
2.1.1. திருமா நாடும் பிற நாடும்
2.2.1. கோயிலின் பழமை
2.2.2. படியெடுக்காத கல்வெட்டு
2.3. தேடி வந்த தெய்வம்
2.3.1. சுயம்பு மூர்த்தி
2.3.1.1. ஆதிக் கருவறை
2.4.1. பரிவாரக் கோயில்
2.5. இரண்டாம் கட்ட வளர்ச்சி
2.6.1. மூன்றாம் கட்ட வளர்ச்சி
2.6.2 மண்டபங்களின் தொன்மை
2.7. நகரத்தார் திருப்பணி
2.8. தொடர்பற்ற கருவறைகள்
2.9. தேரும் சகடையும்

# இரண்டாமியல்
# திருக்கோயிலின் தோற்றமும் வளர்ச்சியும்

## 2.1.திருமாலின் பெருமை

திருமா (துறுமா)வைத் தலைமையாகக் கொண்டு திருமா, வாரியப்பட்டி, மாலூர், ஊத்திவயல், வலையல், புதுவயல், குளத்துப்பட்டி ஆகிய ஊர்களைத் தன்னகத்தே கொண்டது திருமாநாடு. திருமாநாட்டைத் 'துறுமா' நாடு என்றும் குறிப்பர். இது 'முற்காலத்தில் பாண்டிய மண்டலத்திலிருந்த நாடு ஆகும்... பாண்டிய நாட்டில் நாடுகளின் பெயர்கள் எல்லாம் ஊர்களின் அடியாகப் பிறந்தனவே.[1] ஒரு நாட்டுக்குப் பெயர் வைக்குமாறு புகழ்பெற்றும் அடையாளம் காட்டுமாறு சிறப்புப் பெற்றும் திகழ்ந்த ஊர் திருமா.

திருமா நாட்டின் கிழக்கே கானாடு தெற்கே கல்வாயில் நாடும் மேற்கே பொன்னமராபதி நாடும் வடக்கே படைப்பற்றான விரையாச்சிலையும் அமைந்திருக்கின்றன. திருமா நாட்டில் உள்ள ஊர்களின் எண்ணிக்கை, கானாடு, கல்வாயில் நாட்டி லுள்ள ஊர்களின் எண்ணிக்கையைவிட மிகக் குறைவு. திருமா நாட்டைக் கானாட்டுடனோ கல்வாசல் நாட்டுடனோ இணைத்துவிட முடியும். இந்த நாட்டில் இன்றும் மக்கள் எண்ணிக்கை குறைவு: பல்வேறு இனத்தாரும் இங்குக் கலந்து வாழ்கின்றனர். திருமா நாட்டை எந்த நாட்டுடனும் சேர்க்காமல் தனி நாடாகவே தொன்று தொட்டுப் பாண்டிய நாட்டில் நிருவகித்து வந்திருக்கின்றனர்.

### 2.1.1. திருமாநாடும் பிற நாடும்

திருமா நாட்டினர்க்கு அருகிலுள்ள கானாட்டில் சில உரிமை களும் மரியாதைகளும் தரப்படுகிறது. ஏனைய நாட்டினர்க்குத் திருமா நாட்டில் உரிமை கிடையாது. திருமாவுக்கு மூன்று கிலோ மீட்டர் தொலைவில்தான் கானாட்டுக்குரிய சோழாத்தாள் கோயில் என்னும் தலைமையான தெய்வம் உள்ள ஊர் இருக் கிறது. சோழாத்தாள் கோயில் திருவிழாவில், கானாட்டுக்குக் கட்டுப்பட்ட ஊர்களுக்கெல்லாம் அம்மன் செல்லும்; அவ்வூரினர்க்கு அவ்வம்மன் கோயிலில் மண்டகப்படியும் உண்டு.

ஆனால் திருமாவுக்கோ அதைச் சேர்ந்த பிற ஊர்களுக்கோ அம்மன் வருவதில்லை; மண்டகப்படியுமில்லை.

திருமா நாட்டுக்கெனத் தனியே அம்பலம் என்னும் தலைமை யாளர் மாவூரில் இருக்கிறார். ஆனால் நாட்டுக் கணக்கு என்று தனியே ஒருவரில்லை பல்வேறு மரபினர் ஆட்சி ஏற்பட்ட பொழுதும், திருமா நாடு தனி நாடாகவே பிரிந்திருக்கிறது. இது விருதராச பயங்கர வள நாட்டின் உட்பிரிவாகும்[2]. பல்வேறு ஆட்சி மாற்றங்கள் ஏற்பட்டும் திருமாநாடு என்னும் பகுப்பு இன்றும் சிதையாமல் வழங்குகிறது.

புதுக்கோட்டை சமஸ்தானத்தாரின் கோயில், திருக்கோகர் ணம்; இக்கோயில் திருவிழாவுக்கு அமர ஊழியம் செய்ய இச் சமஸ்தானத்திலுள்ள நாடுகள் அனைத்தும் செல்லும். அவ்வாறு செல்வதற்குத் திருமா நாட்டாருக்கு மட்டும் விதிவிலக்குத் தரப்பட்டிருந்தது. ஏதோ ஒரு வகையில் இந்த வட்டாரத்தில் திருமா நாட்டாருக்குத் தனிச் சிறப்பிருந்தமையால் இவ்விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.

தனி நாடாகவும் ஒரு சிறு நாட்டின் நடுநாயாகமாகவும் 'திருமா' விளங்குகிறது. திருமா நாட்டில், தொன்று தொட்டுத் திருக்கோயிலும் திருவிழாவுமாக விளங்குவது திருமா திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலேயாகும். திருமா நாட்டைச் சார்ந்த கண்ணூரைத் தவிரப் பிற ஊர்களில் எங்கும் சிவன் கோயில் கிடையாது. திருமா நாட்டார் அனைவரும் ஒருங்கு கூடும் இடம் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலே. கானாட் டார் சோழத்தாள் கோயிலிலும் கல்வாசல் நாட்டார் கிரணிப் பட்டி முத்துமாரியம்மன் கோயிலிலும் ஒருங்கு கூடுவர். ஆனால் திருமா நாட்டார், சிவன் கோயிலான திருப்பாதாளேச்சுவரர் கோயிலில்தான் கூடுகின்றனர்.

## 2.2.1. கோயிலின் பழமை

பழமையும் தனிமையும் வாய்ந்த இக்கோயிலின் வரலாற்றுப் பழமையைக் காட்டிட இங்குள்ள பாண்டியர் காலக் கல்வெட் டுகள் உள்ளங்கை நெல்லிக் கனியாகத் திகழ்கின்றன. திருப்பாதா ளேச்சுவரர் திருக்கோயிலின் சுவாமி கருவறையின் வெளிப்புறம் வடபக்கச் சுவரிலுள்ள கல்வெட்டு, திருபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ வல்லபதேவர் ஆட்சி ஆண்டின் முப்பத்து மூன்றாவது ஆண்டில் வெட்டப்பட்டது. இதில் குறிக்கப் பெறும் பாண்டிய மன்னன் காலம் கி.பி.1030

## 2.2.2. படியெடுக்காத கல்வெட்டு

பாண்டியர் கல்வெட்டு, கி.பி.1030 முதல் காணப்படுவதால், இக்கோயில் அதற்கு முன்பிருந்தே சிறந்திருக்க வேண்டும். திருமா நாட்டின் அனைத்து ஊர்களுக்குமுரிய சிறந்த சிவன் கோயில் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலேயாகும்; இவ்வட்டாரத் திலோ இந்த நாட்டிலோ வேறு சிவன் கோயில்கள் கிடையாது. இக்கோயிலின், புதுக்கோட்டை சமஸ்தானக் கல்வெட்டுத்துறை படியெடுக்காத கல்வெட்டு ஒன்றிருப்பதைக் கள ஆய்வில் நெறி யாளர் கண்டார். இக்கல்வெட்டு திருக்கோயிலின் அந்தராளத்து வடபக்கச் சுவரில் வெட்டப்பட்டிருக்கிறது. ஏறத்தாழ பதினைந்து வரிகள் இருக்கின்றன. இக்கல்வெட்டைப் படியெடுத்தபோது, கல்வெட்டின் தொடக்கப் பகுதி தெளிவாகப் புலனாகவில்லை.[3] இக்கோயிலில் சோழர் மன்னர்கள் கல்வெட்டு எவையும் பொறிக்கப்படவில்லை.

## 2.3. தேடி வந்த தெய்வம்

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் உருவானமைக்கு ஒரு நாட்டுப்புறக் கதை (FOLK TALE) வழங்குகிறது. இக்கோயில் பற்றி வடமொழி தமிழ்ப் புராணங்களோ கிடைத்தில. திருமாவிலிருந்து நாள்தொறும் ஒருவன் இராசசிங்கமங்கலத்துக்குப் (இப்போது இராங்கியம்) பால் கொண்டு சென்றான். அவன் பால் கொண்டு செல்லும் போது, குறிப்பிட்ட இடத்திற்கு வந்ததும், கால் தடு மாறியோ பிறவாறோ பால் கலயத்திலிருந்து கொட்டிப் போகும்; கலயமும் உடைந்து விடும். இவ்வாறு பால் கொட்டிப் போவதைக் கண்ட அவன், அவ்விடத்தில் கரடு முரடாக இருந்த பகுதியைத் தூய்மை செய்ய வேண்டும்; ஒழுங்கு படுத்த வேண்டும் என்று மண் வெட்டி, அரிவாள், கோடரி போன்ற கருவிகளுடன் வந்தான். அவன் அங்கிருந்த மேடுகளையும் கற்களையும் பெயர்த்தபோது, ஒரு கல்லைக் கண்டான். அவன் அக்கல்லே தன்னைத் தினமும் தடுக்கிவிழச் செய்து பாலைக் கொட்டிற்று என்பதைக் கண்டு கொண்டான்.[4]

அந்தக் கல்லை அடியொடு தோண்டி எடுக்க அவன் மண்ணை வெட்டினான்; வெட்ட வெட்ட அந்தக் கல்லின் அடிப்பாகத்தைக் காண முடியவில்லை. அக்கல் சிவலிங்க வடிவம் என்றுணர்ந்தான். அதன் பின்பு, இக்கல்தான் தன்னுடைய பாலைத் தினமும் தடுத்துக் குளித்துக் குடித்தது என்றுணர்ந்தான். இதனால் அதன் இறைத் தன்மையை உணர்ந்த அவன் நாள் தோறும் பால் கொண்டு போகும்போது அந்த சிவலிங்கத்துக்கும் சிறிது ஊற்றிவிட்டுப் போகலாயினான். இதனால் அவனுடைய ஆடு மாடுகளும் நிலமும் பயிரும் குடும்பமும் பெருகின.

இவ்வாறு காட்டில், மண்ணுக்குள் மறைந்திருந்த சிவலிங்கம், அடியார்க்கு வெளிப்பட்டது; அதன்மூலம் சிவலிங்கம் அடையாளம் காணப்பட்டது; அதனை முழு முதற்பொருளாகக் கொண்டு திருக்கோயில் உருவாயிற்று. சிவலிங்கத்துக்குக் கருவறை எப்போது கட்டப்பெற்றது? யார் கட்டியது? என்ற வினாக் களுக்குத் தெளிவான விடை இல்லை.

## 2.3.1. சுயம்புமூர்த்தி

திருமாத்திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருப்பாதா ளேச்சுவரர் தானே தோன்றி உருவான சுயம்புலிங்க மூர்த்தி யாவார்.

> "சுயம்புலிங்கம் தானே தோன்றுவது. தொடக்கம் அற்றது.
> பலவகைப் பட்ட உற்பாதங்களின் விளைவாகச் சிதைவுறினும்
> திரும்பவும் பிரதிஷ்டை முதலிய கிரியைகளின்றியே வழிபடத்
> தக்க பெருமை வாய்ந்தது"[5]

என்று சுயம்புலிங்கத்தின் சிறப்பையும் நீர்மையையும் ஆகம அறிஞர்கள் அறிவுறுத்துவர் திருக்கோயில்களில், சுயம்புலிங்கமி ருக்குமானால், இத்தகைய வாய்மொழி வழக்குகள் வழங்குவது இயல்பேயாகும். இத்தகைய கதைகளைப் புராணங்களும் பேசுகின்றன.

சுயம்புலிங்கத்தைக் கண்டு கோயில் அமைத்தமையை உணர்த்த கதைகள் மக்களிடையே பல்வேறு வடிவங்களில் வழங்குகின்றன. மேலேகாட்டியது அவற்றுள் ஒன்று, அதுபோலக் காணப்படும் வேறு கதைகள்:

1. பசுமாடுகள் பலவும் காட்டுக்கு மேய்ச்சலுக்குப் போயின, அவற்றுள் ஒரு கராம் பசு காட்டுக்குள் ஒரு பாறையின் பக்கம் தானாகவே தன் மடியிலிருந்து பாலைச் சொரிந்தது. அன்று மாலை உரிமையாளன், பசுமாடு பால் பீச்ச நிற்கவில்லையே என்றும் மாட்டில் பால் இல்லையே என்றும் கவலைப்பட்டு, மாட்டின் நடவடிக்கையைக் கவனித்து அப்பசுமாடு சிவலிங்கத் துக்குப் பால் சொரிவதைக் கண்டுபிடித்தான். பசு சிவலிங்கத் துக்குப் பால் பொழிவதைக் கண்டு அங்குச் சுயம்பு லிங்கமி ருப்பது அவனால் கண்டுபிடிக்கப்பட்டது.

இந்தக் கதையைக் காட்டுமாறு, பல திருக்கோயிலிகளிலுள்ள கல்தூண்களில் சிவலிங்கமும் அதற்குப் பசு பால் சொரிவது போலவும் சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கும் சிவலிங்கத்துக்கு யானை வழிபாடு செய்தது என்றும் சிலந்தி வலை கட்டியது என்றும் கூறுவனவும் இத்தகையனவேயாம். இவை சுயம்பு லிங்கத்தை விலங்குகள்/ உயிரினங்கள் கண்டுபிடித்ததைத் தெரிவிக் கின்றன.

2. வேடுவன் அல்லது வலையன், காட்டுக்குள் கிழங்கு தோண்டப் போனான், கிழங்கை வெட்டும் போது மண்ணுக்குள்ளிருந்து குருதி கசிந்தது. தோண்டிப்பார்த்தால், சிவலிங்கம் இருந்தது. இவ்வாறு வழங்குவன இன்னொருவகையான கதை.

சாக்கோட்டை வீரசேகர மூர்த்தி இவ்வாறு கண்டெடுக்கப் பட்டவரே, இதனைத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை தான் பாடிய சாக்கை (த்தல)ப் புராணத்திலும் உரைக்கின்றார். இவை மனிதனால் சுயம்புலிங்கம் கண்டு பிடிக்கப்பட்ட வகையை வெளிப்படுத்துகின்றன.

இந்த இரண்டு வாய்மொழி வழக்குள் போல, மூன்றாவதாக வழங்குவது திருப்பாதாளேச்சுவர் பற்றிய கதையாகும். மூன்று கதைகளின் அடிப்படையும் கோயிலிலுள்ள லிங்கங்கள் 'சுயம்பு லிங்கமே' என்பதைக் காட்டுவனவாகும். மணிவாசகர் 'சிவ பெருமான்/ தானே வந்து எனது உள்ளம் புகுந்தடியேற்கு அருள் செய்தான்' என்று கூறுவதும் இங்கு நோக்கத்தக்கது.

திருமா திருப்பாதாளேச்சுவரர், தானே விளைந்த சுயம்பு லிங்கம், சிற்பியின் உளிபடாதது. இச்சிவலிங்கத்தின் சுற்றளவு மிகக் குறைவானது. இச்சிவலிங்கம் நெடுங்காலம் மரமே விளைந்து உருவானதாகும். திருமாக்கோயில் இருக்கும் பகுதியில், நெல்லி மரங்கள் மிகுதி. இவ்வட்டாரம் நெல்லிக்காடு; பாதையில் செல்லுவார்க்கு நீர் வேட்கையைத் தணிக்க நெல்லி மரங்கள் வளர்ந்தன. இதனைப் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

> "நெல்லி தின்ற முள்ளெயிறு தயங்க
> உணலாய்ந் திசினா லவரொடு சேய்நாட்டு
> விண்டொட நிவந்த விலங்குமலைக் கவாஅன்"[6]

என்று பாடுவர். இவ்வாறு காட்டிடையே இருந்த நெல்லி மரம், இயற்கையின் சீற்றத்தால் முறிந்துவிட, எஞ்சிய பகுதி இருந்து காலப் பழமையால் கல்லாய் விளைந்தது. மண்ணோடு கல்லாய்க் கிடந்த லிங்கமே பின்னர் வெளிப்பட்டிருக்கிறது மரமே லிங்கமாக விளைந்த சிவன் கோயில்கள் தமிழகத்தில் பல உள்ளன.

## மரமே விளைந்த சிவலிங்கம்

| ஊர்ப் பெயர் | லிங்கம் | மரம் |
|---|---|---|
| 1. மதுரை | சோமசுந்தரர் | கடம்ப மரம் |
| 2. திருக்களம்பூர் | கதலிவனேசுவரர் | வாழை |
| 3. சாக்கோட்டை | வீரசேகரர் | வீரை |
| 4. திருமா | பாதாளேச்சுவரர் | நெல்லி |

| | | |
|---|---|---|
| 5. இலுப்பைக்குடி | தான்தோன்றீசுவரர் | இலுப்பை |
| 6. திருக்களர் | பாரிஜாதவனேசுவரர் | பாரிஜாதம் |
| 7. திருவிற்குடி | வீரட்டானேசுவரர் | துளசி |
| 8. திருவாவடுதுறை | கோமுத்தீசுவரர் | படர் அரசு |

திருப்பாதாளேச்சுவரர், நெல்லி மரம் விளைந்துருவான மூர்த்தியே; இந்த உண்மையைக் காட்ட இக்கோயிற் கருவறையைச் சுற்றி நெல்லி மரங்கள் இருப்பது தக்க சான்றாகும். நெல்லி மர வேரும் காயும் மண்ணுக்குள் விழுந்தது ஆங்காங்கே முளைத்துத் தழைத்துக் காலங்காலமாக இக்கோயிலில் இருக்கின்றன. திருக்களம்பூரில் வாழை மரம் சிவலிங்கமாக இருக்க, அக்கோயில் கருவறையைச் சுற்றி நான்கு பக்கங்களிலும் வாழை மரங்கள் தழைத்திருக்கின்றன. 'வாழையடி வாழையென' இன்றும் திருக்கோயில் பிரகாரம் வாழைத் தோப்பாகக் காட்சியளிக்கின்றது.[7] இவற்றையெல்லாம் ஒப்பு நோக்கினால், திருமாவிலுள்ள திருப்பாதாளேச்சுவரர், நெல்லி மரத்தின் விளைந்த மூர்த்தி என்பது தெளிவாகப் புலனாகும்.

## 2.3.1.1. ஆதிக் கருவறை

இலிங்க நாளத்தின் தலைப் பகுதியில் வளைவாக உள்ள பகுதி 'சிரோவர்த்தனம்' என்று அழைக்கப் பெறும். இது குடை, கோழி முட்டை, வெள்ளரிப்பழம் அல்லது அர்த்த சந்திரன் போன்ற வடிவாக அமையும். இந்த அமைப்பு சுயம்புலிங்கத்திற்குக் கிடையாது. சுயம்புலிங்கம் இருந்த இடத்திலேயே கருவறையை உருவாக்குவர். அச் சுயம்புலிங்கத்திற்குத் தக்கவாறு ஆவுடையார் மட்டும் அடித்துப் பொருத்துவர். சுயம்புலிங்கமாகிச் சிவலிங்கம் மூர்த்தியாகித் திருப்பாதாளேச்சுவரர் இக்கோயிலின் ஆதிமூர்த்தியாகத் திகழ்கின்றார். இக்கருவறை கி.பி.1032ஐ ஒட்டிக் கட்டப் பட்டிருக்க வேண்டும். இக்காலமே இக்கோயிலின் தோற்றத்துக் குரிய காலமாகும்.

இக்கருவறை கட்டப்பட்டபோது விநாயகர், சகஜரிநாயகி, சண்டிகேசுவரர், சூரியன், சந்திரன் ஆகியோர் நிறுவப் பெற்றும் சிறிய அளவில் கருவறை அமைக்கப் பெற்றுமிருத்தல் வேண்டும். இதுவே கோயிலின் தோற்றமும் வளர்ச்சியில் முதற் காலக் கட்டம். இக்காலத்தில் இக்கோயிலில் கொடி மரமோ, முருகனோ இடம்பெறவில்லை.

## 2.4.1. பரிவாரக் கோயில்

திருமாவுக்கு மிக அருகிலுள்ள கண்ணூரில், பாலசுப்பிரமணியர் திருக்கோயில் உள்ளது. அறிஞர் எஸ்.ஆர். பாலசுப்பிர

மணியன் இக்கோயிலைச் சுயம்பிரதானக் கோயில்,[8] என்று கூறுவர். திருமா நாட்டுக்கு அருகிலுள்ள கண்ணூர் பாலசுப்பிர மணியர், திருமாக் கோயிலின் பரிவாரக் கோயிலாக இருக்க வேண்டும்.[9] பக்கத்துப் பக்கத்தூர்களின் கோயில்களிடையே இத்தகைய தொடர்பிருத்தால் இயல்பாகும்.[10] கி.பி.1303முடிய இவ்வாறு இருந்திருக்கிறது.

முதற்கட்ட வளர்ச்சியில் திருக்கோயில் கட்டப் பெற்று திரு முழுக்கு நடைபெற்றிருக்க வேண்டும். இஃது எந்நாளில் நிகழ்ந்தது என்று அறிய ஆவணங்கள் கிடைத்தில.

## 2.5. இரண்டாம் கட்ட வளர்ச்சி

திருக்கோயிலின் இரண்டாவது கால கட்ட வளர்ச்சியில் வயிரவன் கோயில், அம்மன் கோயில் சந்நிதி மண்டபம் இரண்டும் கட்டப்பட்டன. இதனை மெய்ப்பிக்கும் கல்வெட்டு அம்மன் சந்நிதி மண்டபத்தில் காணப்படுகிறது.[11] இதற்குப் பொருள் கொடுத்தவர் காசிதிறம் ரா.சடையப்பத்தம்பிரான்; திருப்பணியை முன்னின்று நடத்தியவர் வைத்தியலிங்கத் தம்பிரான். இங்குச் சொல்லப்பெறும் இரண்டு தம்பிரான்களும் தருமபுர மடத்தைச் சார்ந்தவர்கள்.

வயிரவர் வழிபாடு காசியில் சிறப்பாக நடைபெறுவது. வயிரவரே காசியைப் பரிபாலனம் செய்கிறார். கல்வெட்டில் 'காசிதிறம்' என்று வருவதும் அவர் வயிரவரைக் கோயிலில் எழுந்தருளச் செய்திருப்பதும், இரண்டு தம்பிரான்களுக்கும் காசிக்கும் ஏதோ தொடர்பிருக்க வேண்டும் என்று தெரிகிறது. தூர்வாசபுரம் கிராம நிலத்தின் கால் பங்கு காசி விசுவநாதர்க்கு வழங்கப்பட்டிருக்கிறது.

திருப்பாதாளேச்சுவரர் கருவறை முன் மண்டபத்துக்கு முன்னர் மண்டபம் இல்லாமல் அம்மன் சந்நிதி மட்டும் இருந் திருக்கிறது. கி.பி.1303இல் இந்தப் பெரிய மண்டபமும் கோயிலில் கட்டப்பட்டிருக்கிறது. வயிரவர் கருவறைக்கு முன்னுள்ள அருத்த மண்டபத்தில், மேல் விதானக் கற்கள் ஒவ்வொன்றிலும் பாண்டிய மன்னர்களின் இரட்டை மீன் சின்னங்கள் செதுக்கப் பட்டிருக்கின்றன. இஃது இரண்டாம் கால கட்ட வளர்ச்சி. இத்திருப்பணியின்போது கூட எந்தக் கருவறைக்கு முன்னும் துவாரபாலகர் நிறுவப்படவில்லை. இந்தக் காலத்திலும் கோயில் குடமுழுக்கு நடைபெற்றிருக்க வேண்டும். எப்போது யாரால் நடத்தப்பட்டது என்ற குறிப்பில்லை.

## 2.6.1. மூன்றாம் கட்ட வளர்ச்சி

இத்திருக்கோயில் வரலாற்றில் கி.பி.1455இல் வள்ளி, தெய்வானை உடனாய சுப்பிரமணியர் திருக்கோயில் உருவாகியது. இதனை மெய்ப்பிக்கும் கல்வெட்டு, சுப்பிரமணியர் கருவறை நிலையிலுள்ளது. அக்கல்வெட்டு எழு சீராசிரிய விருத்தமாகும்.

> "இனமேவு சகன்கலி யாயிரத்து முந்நூற்
> றெழுபதுட னேழின்மே லிசைந்த
> மனமேவு வைகாசி யிருபத் தேழில்
> மன்னதுறு மாவீசற் கிடபமற்றுஞ்
> சினமேவு வேல்முருகன் னாச்சி மாருந்
> திருக்கோயிலுங் கண்டு மெய்யன் செல்வத்
> தனபாலன் பேரிந்தை மாதை வீரன்
> தன்னுடனே கிளைவாழத் தாபித்தானே"[12]

என்பது பாடலாக அமைந்த கல்வெட்டு. இந்நிகழ்ச்சி கி.பி.1448இல் வைகாசி மாதம் 27ஆம் நாள் நடைபெற்றிருக்கிறது.[13] இந்நாளில் இத்திருக்கோயிலுக்குத் திருக்குடமுழுக்கு நடைபெற் றிருக்க வேண்டும். பேரிந்தை மாதை வீரன் தனபாலன் என்பான் தானும் தன் குடும்பத்தாரும் வாழ்த்திட, நந்தியையும் (இடபம்) வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியரையும் எழுந்தருள் செய்தான். 'வீரன்' என்பதால் இவன் அரச மரபினனாதல் வேண்டும். இந்த தனபாலன் பற்றிய வேறு செய்திகள் கிட்டில. இவன் வாணாதிராயன் மரபினனாதல் வேண்டும்.

## 2.6.2. மண்டபங்களின் தொன்மை

பாண்டிய நாட்டில் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் கட்டப் பட்ட கோயில்களில் சிவபெருமானுக்கே தலைமை கொடுத்திருப் பர். அக்கருவறையின் அந்தராளம் தாண்டி நாற்கோண வடிவில் முன் மண்டபம் அமைந்திருக்கிறது. இதனைச் சபா மண்டப மாகப் போற்றுவார். இந்த மண்டபமும் பிற்காலத்தில் அம்மன் முன் மண்டபம் கட்டப்பட்ட பின் கட்டி இணைக்கப்பட்டிருக் கிறது. இக்கோயிலில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டு மேற்கே கருவறையில் தொடங்கி ஒரே வரியாகக் கருவறை, அருத்த மண்டபம், முடிய வெட்டியிருப்பது கொண்டு இவற்றின் பழமையை அறிய முடிகிறது. இக்கல்வெட்டு முன்மண்டபச் சுவரில் காணப்படவில்லை.

## 2.7. நகரத்தார் திருப்பணி

அம்மன் கோயில் கருவறை முன்பிருந்ததைப் பிற்காலத்தில் (சுமார் 1890ஐ ஒட்டித்) தேவகோட்டை திருமா சொர்ண வயிர வன் செட்டியார் குடும்பத்தினர் திருப்பணி செய்திருக்கின்றனர். இது யாரால் எப்போது நடைபெற்றது என்று ஒருவருக்கும் தெரியவில்லை. இவர்களே கோயிலுக்கு முன்னருள்ள ஓட்டுக் கொட்டகையையும் கட்டியவர்கள்.[14] இக்கோயிலில் நடைபெற்ற புதிய திருப்பணி இதுவேயாகும். இதனால் அம்மை கருவறையின் பழைய அமைப்பையும் அதில் வெட்டப்பட்டிருந்த கல்வெட்டு களையும் இழக்க நேரிட்டது.

## 2.8. தொடர்பற்ற கருவறைகள்

பாண்டியர் கோயில் கட்டும் முறையில், சிவபெருமான் கருவறையோடு பரிவாரத் தெய்வங்களுக்குரிய கருவறையை இணைத்துக் கட்டுவதில்லை; சுவாமி, அம்மன் கருவறையிலிருந்து பரிவாரத் தெய்வங்களின் கருவறை தனியாகவே திகழும். இதனால் சுவாமி, அம்மனுடைய தலைமையை வெளிப்படுத்து வர். மாத்தூர் ஐந்நூற்றீசர் திருக்கோயில் மேடையில் சுவாமி, அம்மனுக்கே கருவறைகள் கட்டப்பட்டிருக்கின்றன. பிற கடவுளரை அம்மேடையை விட்டு வெளியே அமைத்திருக் கின்றனர். இராங்கியம் பூமிச்சுவரர் திருக்கோயிலிலும் இந்த அமைப்பையே காண முடிகிறது. இதனால் கோயில் முழுமையும் மண்டபம் அமைக்க வேண்டிய தேவை இல்லை; பொருட் செலவுமில்லை.

## 2.9. தேரும் சகடையும்

கி.பி.1930ஐ ஒட்டி இராங்கியம் நகரத்தார் ஒருவர் இங்குச் சனீசுவரரை நிறுவினார். அவர் பெயர் விவரம் தெரியவில்லை. திருமாவுக்குப் பக்கத்திலுள்ள வாரியப் பட்டியில், நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் வாழ்ந்தனர். அவர்களில் ஒரு குடும்பத் தார் மிக அழகான வைரத் தேர் செய்து கொடுத்திருக்கின்றனர். முன்பு தேரிருந்து சிதைந்த பின் இவர்கள் இத்தேரைச் செய் திருக்க வேண்டும். இந்தத் தேரும் பழுதுபட்டுச் சில ஆண்டுகள் ஓடாமலே இருந்து விட்டது. இப்போது தேர் சிறுகச் சிறுகச் சிதைந்து விட்டது. தேரிலிருந்த மரச் சிற்பங்கள் பலவும் கள்வர் கைப்பட்டுப் போய்விட்டன. தேரை இழுக்கக் கயிறு வடத்தைப் பயன்படுத்தாமல் இரும்புச் சங்கிலியை வைத்திருக்கின்றனர். இப்போது சிறிய சகடை ஒன்றைச் செய்து அதில் தேரோட்டம் நடத்துகின்றனர்.

கி.பி.1000ஐ ஒட்டி யாராலோ கட்டப்பட்ட திருப்பாதாளேச் சுவரர் திருக்கோயில் காலந்தொறும் புதுப் புது வளர்ச்சி பெற்று வளர்ந்திருக்கிறது. மிக அழுத்தமாக மன்னர்களின் ஆதரவோ மக்களின் ஆதரவோ திருக்கோயிலுக்கு இருந்ததாகத் தெரிய வில்லை. அவ்வப்போது சிறு சிறு திருப்பணி நிகழ்ந்து கோயில் பழைய வடிவம் மாறாமல் இருக்கிறது.

## இவ்வியலில் இயம்பப் பெற்ற கருத்துகள்

1. பல ஊர்கள் இணைந்த ஒரு நாட்டுக்குப் பெயர் தரும் வண்ணம் 'திருமா' புகழ் பெற்றிருக்கிறது. விருதராச பயங்கர வளநாடு என்னும் கானாட்டின் உட்பிரிவாகத் திருமாநாடு இருந்தது. இந்நாட்டிலுள்ள ஒரே சிவன் கோயில், இதுவேயாகும்.

2. கி.பி. 1030ஐ சார்ந்த கல்வெட்டு இக்கோயிலில் பொறிக்கப்பட்டிருக் கிறது. இதனால், இக்கோயிலின் பழமை விளங்கும். இக்கோயில் அந்தராளத்திலுள்ள கல்வெட்டு, படியெடுக்கப்படவில்லை; இக் கல்வெட்டு இக்கோயிலின் பழமையை வெளிப்படுத்தக் கூடும்.

3. திருப்பதாளேச்சுவரர், சுயம்புலிங்கம்; நாள்தோறும் பால் கொண்டு வந்தவனால், இம்மூர்த்தி காணப் பெற்று வழிபடப்பட்டார். இவன் யாவன்? எவ்வினத்தவன்? இவன் மரபினருக்குக் கோயிலில் ஏதேனும் உரிமை உண்டா? என்பன போன்ற விவரங்கள் தெரிந்தில.

4. சிவலிங்கங்கள் பலவும் மரங்களே விளைந்தானவை. பாலை நிலப் பாதை வெளியில் சங்க காலந் தொட்டு நெல்லி மரங்கள் இருப்பது இயற்கை. அவ்வாறு இருந்த நெல்லி மரமே, திருப்பாதாளேச்சுவரர் என்னும் சிவலிங்கமாக விளைந்திருக்கிறார். இவரை நடுநாயகமாகக் கொண்டே இக்கோயில் உருவாகியிருக்கிறது. இக்காலத்தில் விநாயகர் அம்மன், சண்டிகேசுவரர், சூரியன், சந்திரன் ஆகியோர் பிரதிட்டை செய்யப் பெற்றிருக்கின்றனர். இது கோயிலுருவான வரலாறு.

5. இத்திருக்கோயிலின் இரண்டாம் கால கட்டத் திருப்பணி கி.பி.1303இல் நிகழ்ந்தது. வயிரவர் சந்நிதி, திருக்கோயில் மண்டபம் ஆகியன இக்காலத்தில் ஏற்பட்டன இதனைச் செய்தவர்கள் இரண்டு தம்பிரான்கள்; மன்னர்கள் தொடர்பு பற்றிய குறிப்பேதுமில்லை.

6. இக்கோயிலின் மூன்றாங் கட்ட வளர்ச்சி வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் சந்நிதியும் அதிகார நந்தியும் பெருமானும் எழுந்தருளியதாகும். இதனைப் பேரிந்தை மாதை வீரன் தனபாலன் என்பான் செய்தான். அந்த ஆண்டு (இந்த ஆண்டான) தாது ஆண்டு வைகாசி மாதம் இருபத்தேழாம் நாள். இதனைப் பாட்டாகவே பாடிக் கல்லில் வெட்டியிருக்கின்றனர்.

7. திருமாலிருந்து தேவகோட்டைக்குக் குடியேறிய நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒருவர் அம்மன் கருவறையையும் வெளிப் பிரகார முன்னுள்ள ஓட்டுக் கொட்டகையையும் கட்டியுள்ளார்.

# மேற்கோள் விளக்கம்

1. டி.வி. சதாசிவப்பண்டாரத்தார் (1956)- பாண்டியர் வரலாறு கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை, மூன்றாம் பதிப்பு, பக்.174-175

2. கானாடு என்பதை விருத ராச பயங்கர வளநாடு என்பர்; கானாடு, வளநாடு என்னும் பெரும் பிரிவாம்; அப்பிரிவில் அடங்கிய நாடு திருமாநாடு என்று டாக்டர் தே.சொக்கலிங்கம் கருத்துத் தெரிவிக்கிறார்.

3. மீண்டும் படியெடுத்துக் கல்வெட்டைப் படிக்கப் போதிய காலம் இல்லை.

4. இக்கதையில், வெட்டியவன் இந்த இனத்தான் என்று சொல்லப்படவில்லை.

5. கா.கைலாசநாதக் குருக்கள் (1963)- சைவத் திருக்கோவிற் கிரியை நெறி, ப.120

6. டாக்டர் உ.வே. சாமிநாதையர் (1947)- குறுந்தொகை கபீர் அச்சுக் கூடம், சென்னை, இரண்டாம் பதிப்பு, பா எண் 262:4-6

7. பெருங்களூர்வம்சோத்தாரக நாதர் கோயில் சிவலிங்கம் மல்லிகைக் கொடியின் விளைவு என்பர். கருவறையொடு தொடர்புடைய மல்லிகைக் கொடியின் இணைப்பு இன்றும் பிரகாரத்தில் பாதுகாக்கப்படுகிறது.

8. எஸ்.ஆர். பாலசுப்பிரமணியம் (1966)- சோழர் கலைப்பாணி பாரி நிலையம் ப.50 சென்னை-1

9. இவ்வாறு கருதுபவர் டாக்டர் தே.சொக்கலிங்கம்

10. ஸ்ரீ சந்திரசேர சரஸ்வதி (1980)- தெய்வத்தின் குரல், இரண்டாம் பாகம், வானதி பதிப்பகம், சென்னை, பக்.728-753

11. ..... (1929)-புதுக்கோட்டைச் சமஸ்தானக் கல்வெட்டுகள், புதுக்கோட்டைச் சமஸ்தானம், எண் 774

12. மேலது, எண் 774

13. வருகிற ஆண்டு, 'தாது' வருடம் என்பது நினைத்தற்குரியது.

14. அவர்கள் சுவாமி, அம்மன் கருவறைகளைப் பிரித்துத் திருப்பணி செய்ய விரும்பியதாகவும் சுவாமி விரும்பவில்லை என்பதால் திருப்பணியை மேற்கொள்ள முடியவில்லை. எனவே அந்தத் தொகையைச் செலவு செய்து முன் ஓட்டு வாரத்தைக் கட்டினார்.

# மூன்றாமியல்

# திருக்கோயிலமைப்பு

# மூன்றாமியல்
# திருக்கோயிலமைப்பு

## 3.1.ஊரும் கோயிலும்

ஊருக்கு அழகு தருவது திருக்கோயில்; திருக்கோயில்களால் ஊர்கள் புகழ் பெற்றுச் சிறந்து விளங்குகின்றன. திருக்கோயில்கள் ஆற்றங்கரையிலோ கடற்கரையிலோ ஆறுகடலோடு கலக்குமி டத்திலோ மலைமேலோ மலைச் சரிவிலோ காட்டிலோ சோலை நடுவிலோ மகான்கள் வாழுமிடத்திற்குகருகிலோ இருக்க வேண்டும். ஊரின் இன்ன திசையில் இன்ன கோயில் அமைய வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. இதனை

> "ஒரு காலத்தில் விஷ்ணு கோயில் கிழக்கில் அல்லது மேற்கில் சிவன் கோயில் வடகிழக்கில், துர்க்கை கோயில் தென்மேற்கில், தாரகாரி கோயில் வடக்கில், கணேசர், ஐயனார் கோயில்கள் தென்மேற்கில், எல்லாத் தெய்வங்களுக்கும் நடுவிலும் இருக்கலாம்"[1]

என்று அறிஞர் சுட்டுவர். சிவன் கோயில் ஊருக்கு வடகிழக்குத் திசையில் அமைதல் வேண்டும் என்பது இதனால் வெளிப்படும்.

திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில், ஊருக்கு ஓரத்தில்- வடக்குப் பக்கமாக- அமைந்திருக்கிறது. காடும் காடு சார்ந்த பகுதியாக நிலப் பரப்பினிடையே கோயில் கட்டப் பெற்றிருக்கிறது. கோயில் பண்டுதொட்டு இதே இடத்தில் இருக்க, ஊரில் வாழ்ந்த மக்கள் குடிபெயர்ந்து வேறிடத்திற்குப் போய் விட்டனர்; இதனால் கோயில் இடமாறியதுபோலத் தோன்று கின்றது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் 'திருமா' என்று ஓர் ஊரே குறிக்கப்படுகிறது; ஆனால் இன்று அவ்வூர் மேலத் திருமா என்றும் கீழத் திருமா என்றும் இரு பகுதியாகி விட்டது. ஒரு பகுதி கிழக்குத் திசையிலும் இன்னொரு பகுதி மேற்குத் திசையிலுமுள்ளன.

கோயிலுக்கு வடமேற்கே இருந்த குடியிருப்புகள் எக்காரணத் தாலோ சிதைந்து போய்விட்டன. ஆதலால் கோயில் முறைப்படி அமைந்த காலத்தில் இருந்த ஊர் இப்போது இடம் மாறிவிட்டது.

## கிழக்கும் தெற்கும்

திருக்கோயிலின் சுற்றுப்புறம் பற்றிய கருத்து ஒன்று ஈண்டு குறிக்கற்பாலது திருக்கோயிலுக்குக் கிழக்குப் பக்கமும் தெற்குப் பக்கமும் பள்ளமாக இருக்க வேண்டும் என்பது விதி. அதனால் தான் கோயிலின் கிழக்குச் சந்நிதியிலும் தெற்குச் சந்நிதியிலும் திருக்குளங்களை ஆன்றோர்கள் அமைந்தனர். திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் முன்னர் திருக்குளம் இல்லை; கோயிலின் தெற்குப் பக்கம் கண்மாய் ஒன்று காணப்படுகிறது. பொதுவாக, சிவன் கோயிலில் சிவபெருமான் சந்நிதிக்கு எதிரே திருக்குளம் இருக்கும் வண்ணம் இங்குக் குளம் இல்லை.

## 3.2. உயரம் குறைவான திருக்கோயில் அடித்தளம்

திருக்கோயில்கள், உயரமான மேடை மீதே கட்டப்பட்டிருக்க வேண்டும். முருகப் பெருமான் குன்றங்களில் வீற்றிருக்கின்றான் என்பதைக் 'குன்று தொறாடலு நின்றதன் பண்பே'[2] என்று நக்கீரர் நவிலுவது உயரமான இடத்தில் ஆண்டவன் வீற்றிருப்பான் என்ற கோட்பாட்டைப் புலப்படுத்துவதற்குத்தான். மனிதன் தன்னை விட உயர்ந்தவன் இறைவன் என்பதைத் தான் வாழுகின்ற இடத்தைவிட உயரமான இடத்தில் இறைவனுக்குக் கோயிலமைத்து அவனை வைத்து வணங்குவதன் மூலம் காட்டுகிறான். இதனாலேயே உயரமாக அடித்தளம், கோயிலுக்கு அமைக்கும் வழக்கம் தோன்றியது. பாண்டிய நாட்டில் பாண்டியர்கள் கட்டிய கோயில்கள், சோழ நாட்டுக் கோயில்கள் போல அடித்தளம் உயரமானவை அல்ல. பாண்டிய நாட்டிலுள்ள கோயில்கள் உயரம் குறைவான அடித்தளத்தையுடையவை. திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் தரை மட்டத்திலிருந்து குறைந்த உயரமுடையது; நாளடைவில் மண் மேவி, திருக்கோயில் அடித்தளம் இப்போது தரைமட்டமாகவே உள்ளது.

கோயில் அடித்தளத்தின் உயரத்தைக் கூட்டப் பொருட்செலவு கூடுதலாகும். தேவையான கற்கள், வேண்டிய கருவிகள் என்று அவை கூடிக் கொண்டே செல்லும். பாண்டிய நாடு, வளம் குறைந்த நாடு; வானம் பெய்யின் நிலம் விளையும் எனவே பாண்டிய நாட்டில் திருப்பணி செய்தவர்கள், திருக்கோயில் அடித்தள உயரத்தைக் கூட்டவில்லை. திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் தளமும் உயரமாக இல்லை.

## முதற் கட்டத் திருப்பணி

### 3.3.1. ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறை

*திருக்கோயிலின் முதன்மையான இடம் ஸ்ரீ பாதாளேச்சுவரர் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய கருவறையேயாகும். திருக்கோயில் கட்ட கால்கோள் செய்யும்போது சிவபெருமான் கருவறையிலேயே முதற்கண் தொடங்குவர். சிவபெருமான் கருவறை செவ்வகமாக விளங்குகிறது. திருக்கோயில்களின் தரை அமைப்பு பல வகையின.*

"சாதாரணமாகக் கோயில்கள், சதுரம், வட்டம், செவ்வகம், கஜபிருஷ்டம் (தூங்கானை மாடம்), அண்டம், ஆறுமூலை, எட்டு மூலை முதலிய அமைப்புகளைப் பெற்றிருக்கும். இவற்றில் சதுரம் அல்லது செவ்வகந்தான் மற்றெல்லாவற்றிற்கும் மூலா தாரமானதாகும்."[3]

*இவற்றுள். ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறை செவ்வகமாக அமைந்திருக்கிறது.*

*'கருப்பக்கிரக உத்தளவில் பின் சுவர் முதல் மையம் வரையில் பத்துப் பாகம் செய்து நடுவில் 10ஆவது பாகம் லிங்கமூர்த்தியை அமைத்தல் வேண்டும்,'[4] இவ்விதிக்கு இணங்க ஸ்ரீ பாதாளேச்சு வரர் கருவறையின் நடுப் பாகத்தில், கிழக்கு நோக்கி வீற்றிருந்து அருள்பாலிக்கின்றார். கருவறையில் வேறு சிற்பங்களோ அடையாளங்களோ இல்லை. கோயிலின் திருச் சுற்றின் தரை மட்டமே, கருவறையின் தரை மட்டமாகும். ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறை உயரமாக அமைக்கப் பட்டிலது.*

### 3.3.1.1. கருவறை வாயில் முன் பகுதி

*ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறையின் முன் இடப்புறம் விநாயகர் திருவுருவம் அமர்ந்திருக்கிறது. வலப்புறம் யாருடைய திருவுருவமும் இல்லை. இவ்விடத்தில் இன்ன கடவுள் இருக்க வேண்டும் என்று ஆகம நூல்கள் விதித்திருக்கின்றன.*

"மூலலிங்கம் இருக்கும் கர்ப்பகிருஹத்தின் வாசற்படியில் இரண்டு பக்கங்களிலும் விநாயகரையும் ஸ்கந்தரையும் சிவாகமத்தில் சொன்னபடி ப்ரதிஷ்டித்து"[5]

*என்று ஆகம வசனபூஷணம் உரைக்கின்றது. பல திருக்கோயில் களில் இந்த அமைப்பைக் காண இயலுகின்றது.*

*கருவறை வாயில் நிலைப் படியில் கஜலெட்சுமி திருவுருவம் வடிக்கப்படவில்லை நிலைப்படியில் மேலே மகர தோரணம் செதுக்கப்பட்டிருக்கிறது.*

## 3.3.2. அந்தராளமும் முன் மண்டபமும்

கருவறைக்கு முன்னர் அந்தராளம் அமைந்திருக்கிறது. இப்பகுதியில் சிற்பங்களோ அடையாளங்களோ இல்லை. அந்தராளத்தின் வடக்குச் சுவரில் மிகப் பெரிய கல்வெட்டுக் காணப்படுகிறது. இக்கல்வெட்டு இதுகாறும் படியெடுக்கப் படவில்லை. இக்கல்வெட்டில் திருமயம், கண்ணனூர் என்பன போன்ற ஊர்ப் பெயர்கள் படிக்கும் வண்ணம் தெரிகின்றன.

இதற்கு முன்னே மிக நீளமான முன் மண்டபம் அமைந் துள்ளது. இம்மண்டபத்தின் வடக்குப் பக்கம் சிறிய வாயிற்படி இருந்து அடைக்கப்பட்டிருக்கிறது. இம்மண்டபத்தில்தான் நடராசரும் சிவகாமியம்மையும் அருளாட்சி புரியும் சபா மண்டபம் திகழ்கின்றது. இம் முன் மண்டபத்தின் வடக்குப் புறம் சிறு மேடையில் நடராசர் சிவகாமியம்மை சந்நிதி இருந்தது. இப்போது இங்கிருந்து செப்புத் திருமேனிகளின் காப்புக் கருதி அவை ஓரறையில் காப்பாக வைக்கப்பட்டிருக்கின்றன. கருவறை யின் அகலத்தைவிட இம் முன் மண்டபத்தின் அகலமும் நீளமும் சற்று கூடுதலாகும்.

இம் முன் மண்டபத்தின் தென்கிழக்குப் பகுதியில் நிலவறை இருக்கிறது. இந்நிலவறையின் வழி இப்போது முழுமையாக அடைக்கப்பட்டுவிட்டது. இந்த வட்டாரத்தில் பல்வேறு சிவன் கோயில்களில் நிலவறை காணப்படுகிறது. நிலவறை காணப்படும் கோயில்களில் பேரையூர் நாகநாத சுவாமி கோயில், திருமெய்யம் சத்தியமூர்த்திப் பெருமாள் கோயில், ஆகியன குறிக்கத்தக்கன. திருமாக் கோயில் நிலவறையில் (சுரங்கத்தில்) உற்சவர் திரு மேனிகளும் அணிகலன்களும் இருக்கின்றன. நிலவறையிலிருந்து எடுத்துவரப் பெற்ற இரண்டு திருமேனிகள் இப்போது உற்சவர் திருமேனிகளுடன் பூசை செய்யப் பெறுகின்றன.

முன் மண்டபத்தின் வடகிழக்கு மூலையில் சிறிய அறை ஒன்று தடுக்கப்பட்டு இங்கு உற்சவத் திருமேனிகள் காக்கப் படுகின்றன. இம் மண்டபத்துக்குள் கோயில் பொருள்களை வைத்திருக்கும் இருப்புப் பெட்டி இருக்கிறது.

ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் கருவறை, அருத்த மண்ட பம் (அந்தராளம்) ஆகிய இரண்டு பகுதிகளும் இத்திருக்கோயிலில் மிகப் பழமையானவை. இவ்விரண்டு பகுதிகளின் தென்புற வெளிச் சுவரில் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இவை கருவறையின் குமுதகத்திலிருந்து தொடங்கி அதே உயரத் தில் அந்தராளம், வரை வரிவரியாக வெட்டப் பட்டிருக்கின்றன. இக் கல்வெட்டின் காலம் கி.பி.1030 பாண்டியன் ஸ்ரீ வல்லபன் காலத்திலேயோ அதற்கு முன்னரோ இக்கோயில் கட்டப்பட் டிருக்க வேண்டும் என்று புலனாகும்.

## 3.4. பரிவாரக் கோயில்கள்

*இக்கோயிலமைப்பில் சிவபெருமான், அம்மன், விநாயகர், சண்டிகேசுவரர் என்ற கடவுளர்களே திருக்கோயில் கட்டப்பட்ட காலத்திலிருந்து வழிபாட்டில் இருந்திருக்க வேண்டும். இங்குள்ள வயிரவர் சந்நிதி கி.பி.1304இல் உருவாகியிருக்கிறது.*

## 3.4.1. விநாயகர் திருக்கோயில்

*'திருக்கோயிலைச் சுற்றி வரிசையாக மாடங்கள் அமைப்ப தற்குப் பதிலாகப் பிரதானக் கோயிலைச் சுற்றிப் பல சிறு ஆலயங்களை அமைக்கும் முறையும் மேற்கொள்ளப் பெற்றது. பிரதானக் கோயிலைச் சுற்றிச் சிறிய உபகோயில்களை நிறுவுவது ஒரு வகை. எல்லோரா கைலாசநாதர் கோயில் (8ஆம் நூற்றாண்டு) புதுக்கோட்டைக்கருகில் மேலமலையிலுள்ள விஜயாலய சோழீசுவரர் கோயில் (9ஆம் நூற்றாண்டு) ஆகியன இவ்வகையைச் சேர்ந்தவை[6] அஷ்டபரிவாரக் கோயிலமைப்பைத் தழுவிக் கருவறையுடன் ஒட்டாமலோ இணையாமலோ விநாயகர் கருவறை திருமாக் கோயிலில் தனியே கட்டப்பட்டிருக் கிறது. இராங்கியம் பூமிசுவரர் திருக்கோயிலிலும் விநாயகருக் குரிய கருவறை இவ்வாறுதான் கட்டப் பெற்றுள்ளது. திருமாக் கோயிலிலுள்ள விநாயகருக்குத் தனியே பெயர் ஒன்றும் வழங்க வில்லை. இவர் திருக்கோயிலின் தென்மேற்கு மூலையான- கன்னி மூலை- நிருதி மூலை என்று சொல்லப்படும் இடத்தி லமைந்த கருவறையில் வீற்றிருக்கிறார். இந்த இடமே இவருக் கென்று திருக்கோயிலில் உரிய இடமாகும்.*

*இவ்விநாயகர் வடிவம் மிகப் பெரிய அழகானதுமாகும். இதன் வீறார்ந்த தோற்றம் பாண்டியர் காலத்தியது என்பதை உணர்த்து கின்றது. இக் கருவறை வாயிற்படியின் இடபுறம் நர்த்தன விநா யகர் வடிவம் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு புடைப்புச் சிற்பத்தை அமைப்பது பாண்டியர் கோயில் களில் காணக்கூடியது. எனவே இக்கோயில், ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் எழுப்பப்பட்டபோது கட்டப்பட்டதாகும்.*

*விநாயகர் கருவறையின் மேல் பகுதி- முகடு- கூம்பாகச் சாந்து கொண்டு கட்டப்பட்டிருக்கிறது. செங்குத்தான சுவர்கள் கொண்ட கருப்பக் கிரகத்தின் மீது பிரமிட் உருவில் மேல் கட்டு அமைக்கும் முறை தென்னிந்தியாவில் ஏழாம் நூற்றாண்டிலேயே நிலைபெற்றுவிட்டது.[7] இத்தளத்தின் மீது விமானம் கட்டப்பட வில்லை. பிற்காலத்தவர்களும் இதனைத் திருத்தியோ புதுக்கியோ கட்டிலர். இதனால் இக்கருவறையின் அடித்தளம் வாயில்நிலை ஆகியன இரண்டும் உயரம் குறைந்தனவாக உள்ளன. விநாயகர்*

கருவறைக்கு முன்னே மண்டபம் இல்லை. பிற்காலத்தில் கட்டப் பெற்ற சுப்பிரமணியர் கருவறையில் முன் மண்டபம் உள்ள அமைப்பை நோக்கும்போது விநாயகர் கருவறையின் பழமை புலனாகும். இக்கருவறைக்கு முன்னர் விநாயகரின் பெருச்சாளி வாகனமும் அதற்குப் பின்னே பலிபீடமும் வெட்ட வெளியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்றன. இவருக்கு விமானமும் கட்டப்படவில்லை.

## 3.4.2. அம்மை சந்நிதியும் சண்டிகேசுவரர் சந்நிதியும்

ஸ்ரீ பாதாளேச்சுவரர் சந்நிதிக்கு முன் இடப்பக்கத்தில்- கோயிலின் வடக்குப் புறத்தில்- அம்மையின் கருவறை அமைந் திருக்கிறது. இவ்வம்மையின் பெயர் ஸ்ரீ சகஜரிநாயகி என்று சிவாச்சாரியார் கூறுகின்றார்.[8] பாகம்பிரியாநாயகி' என்று மக்கள் சொல்லுகின்றார்கள். ஆனால் இவ்வம்மையின் பெயர் பெரிய நாயகி என்று இவ்வூர் அம்பலகாரராக இருந்த திரு.பெரியசாமி அம்பலம் அவர்கள் சொன்னதாக நெறியாளர் தெரிவிக்கிறார்.[9] இங்குள்ள கல்வெட்டுகளில், அம்மன் கோயில் முன் மண்டபம் கட்டியது பற்றிச் சொல்லும் கல்வெட்டில்கூட அம்மை பெயர் சொல்லப்படவில்லை.[10] எனவே இங்குள்ள அம்மைக்கு உரிய பழமையான பெயர் யாது என்பது புலனாகவில்லை.

அம்மன் கோயில் கருவறையும் அந்தராளமும் தரை மட்டத்திலிருந்து ஐந்தடி உயரமாகக் கட்டப்பட்டிருக்கின்றன. இக்கோயில் கி.பி.1929ஐ ஒட்டிப் பிரித்துக் கட்டப்பட்டது என்று ஆராய்ச்சியால் புலனாகிறது. புதுக்கோட்டை சமஸ்தானத்தி லிருந்த கல்வெட்டுகளையெல்லாம் படியெடுத்து கி.பி.1929இல் பதிப்பித்தனர். இப்பகுதியில் திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் கோயிலுள்ள கல்வெட்டாக அம்மன் சந்நிதியிலிருந்து ஒரு கல் வெட்டுக்கூடப் படியெடுக்கப் படவில்லை.[11] அம்மன் கருவறை, கட்டப் பயன்படுத்தப்பட்ட கற்கள், ஏனையவற்றிலிருந்து வேறானவை; இக்கருவறையின் புற அழகு பத்தொன்பதாம் நூற்றாண்டுத் திருப்பணி என்பதை நன்குணர்த்துகின்றது. கி.பி.1340க்கு முன் கட்டப்பட்ட கருவறை, பிற்காலத்தில் பிரித்துக் கட்டப்பட்டிருக்கிறது. ஆதலால் அம்மையின் திருவுருவம், கோயில் உருவான காலத்திலேயே இங்குத் தனிக் கருவறையில் நிறுவப் பட்டிருக்க வேண்டும் அம்மையின் பழமையான கருவறை பிரித்துக் கட்டப்பட்டுவிட்டது.

திருப்பாதாளேச்சுவரர் அபிடேகத் தீர்த்தம் வெளியேறும் தூம்புக்கு நேரே சண்டிகேசுவரர் கருவறை காணப்படுகிறது.

சண்டிகேசுவவர் சந்நிதியும் கோயிலில் பழமையானது. ஆனால் இக் கருவறையும் முன் மண்டபமும் பிற்காலத்தில்

கட்டப்பட்டவை. இவ்வாறு ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில், கி.பி.1030இலிருந்து கி.பி.1300 முடிய விளங்கியது.



முதற்கட்ட வளர்ச்சி

## 3.5. திருக்கோயிலில் இரண்டாம் கட்ட வளர்ச்சி

இரண்டாம் கட்ட வளர்ச்சியில் குறிப்பிடத்தக்கது அம்மன் சந்நிதி முன் மண்டபமும் வயிரவர் கருவறையும் ஏற்பட்டதாகும். கி.பி.1304இல் அம்மன் சந்நிதி மண்டபமும் வயிரவர் கோயிலும் கட்டப் பெற்றது. இக்கல்வெட்டில் யாருடைய ஆட்சிக் காலம் என்பது சொல்லப்படவில்லை. ஆனால் ஆண்டு கூறப்பட்டிருக் கிறது. இந்த இரண்டையும் கட்டப் பொருள் நல்கியவர் காசிதிறம் ரா.சடையப்பத் தம்பிரானவர்கள்; அவர் கொடுத்த பொருளைப் பெற்றுத் திருப்பணி செய்தவர் வயித்திலிங்கத் தம்பிரான். 'காசிதிறம்' என்ற அடை உணர்த்தும் பொருள் தெளிவாகப் புலப்பட்டிலது. காசிதிறம், தம்பிரான் என்று அமையும் சொற்களைக் கொண்டு திருப்பனந்தாள் காசி மடத்துக்கும் இவர்களுக்கும் தொடர்புண்டு என்று கருதத் தோன்றுகிறது. இதை ஏற்றுக் கொள்ளக்கூடிய ஓலைச் சாசனம் ஒன்று காசி திருப் பனந்தாள் மடத்திலுள்ளது.

அம்மன் கருவறை, தெற்கு நோக்கி அமைந்துள்ளது. அதனை அடுத்து ஒரு சிற்றறை காணப்படுகிறது; இது பொருள்கள் வைக்கும் உக்கிராண அறை; அம்மன் கருவறைக்கும் வயிரவர் கருவறைக்கும் இடைப்பட்ட இடத்தைத் தடுத்து உருவாக்கிய தாகும். இந்த அறையை அடுத்து வயிரவர் கருவறையும் அந்த ராளமும் உள்ளன. அம்மன் கோயில் கருவறை போல இவற்றின்

தளம் தரை மட்டத்தைவிட உயரமாகவே கட்டப்பட்டிருக்கின்றது.

அம்மன் சந்நிதி, வயிரவர் சந்நிதி இவற்றுக்கு முன்னர் பெரிய மண்டபம் உள்ளது. இம்மண்டபத்திலுள்ள தூண் ஒன்றிலேதான் சடையப்பத் தம்பிரான், வயித்திலிங்கத் தம்பிரான் ஆகியோரைச் சுட்டும் கல்வெட்டுப் பொறிக்கப்பட்டிருக்கிறது. வயிரவர்



இரண்டாம் கட்ட வளர்ச்சி

கருவறையின் கிழக்குப் பக்கத்தில் ஒரு தடுப்புச் சுவர் அடைப்பாகக் கட்டப்பட்டிருக்கிறது. இச்சுவரை ஒட்டியே சப்தமாதர் திருவுருவம், சூரிய சந்திரர் திருவுருவம் சனீசுவரர் உருவம் ஆகியன இருக்கின்றன.

## 3.6. மூன்றாம் கட்டத் திருப்பணி

திருக்கோயில்கள், தாம் தோன்றிய காலத்தில் உள்ளவாறே எப்போதும் இருப்பதில்லை. அவை காலந்தோறும் புதிய சந்நிதிகளைப் பெற்று வளருகின்றன. புதிய சந்நிதிகளை அமைக்கும்போது, கோயிலின் பழைய பகுதிகளைப் பிரித்துக் கட்டுவதும் பழுதுபார்ப்பதும் உலகியற்கை. கி.பி.1304இல், திருக்கோயிலில் புதிய மண்டபங்கள் கட்டப் பெற்றிருக்கின்றன. இஃது இரண்டாங் காலக் கட்டத் திருப்பணி; அடுத்து கி.பி.1456இல் மூன்றாவது கட்டத் திருப்பணி நடைபெற்றிருக்கிறது. இக்கட்டத்தில் சுப்பிரமணியர் சந்நிதியும் நந்தியும் இங்கு ஏற்பட்டிருக்கின்றன. பழைய பகுதிகளில் சில கருவறைக்கு மட்டும் முன் மண்டபங்கள் அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இக்காலத்தில் சுவாமிக்குரிய அந்தராளமும் அம்மன் முன் மண்டபமும் இணைத்துக் கட்டப்பட்டிருக்க வேண்டும்.

### 3.6.1. வள்ளி தெய்வானை சமேத மூர்த்தி

திருக்கோயிலின் வடமேற்கு மூலையான வாயு மூலையில் ஸ்ரீ வள்ளி தெய்வானை சமேத ஸ்ரீ சுப்பிரமணியர் வீற்றிருக்கும் கருவறை திகழ்கின்றது. இது கருவறையும் முன் மண்டபமுமாக உள்ளது. திருமா பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் சுப்பிர மணியர்கோயில் இல்லாமலேயே கோயில் பல ஆண்டுகள் இருந்திருக்கிறது.[12] பிற்காலத்தில் (ஏறத்தாழ நூற்றைம்பது ஆண்டுகள் கழிந்த பின்) கி.பி.1456இல் (கலியுகம் 1377) பேரிந்தை தனபாலன்மாதை வீரன் இக்கோயிலுள்ள முருகனையும் வள்ளி தெய்வானையையும் நிறுவிக் கருவறையை அமைத்தான். இது தாது வருடம் வைகாசி மாதம் 27ஆம் தேதி நடைபெற்றது.[13] வயிரவர் சந்நிதி கட்டி நூற்றைம்பது ஆண்டுகள் கழிந்தபின் சுப்பிரமணியர் சந்நிதி தோன்றியிருக்கிறது.

### 3.6.2. திருக்கோயிலும் நந்தியும்

சுப்பிரமணியர் சந்நிதி ஏற்பட்டபோதுதான் திருப்பாதாளேச்சு வரர் திருமுன் நந்தியம்பெருமானும் புதிதாக எழுந்தருளச் செய்யப்பட்டிருக்கிறார். பழைய நந்தி பின்னமானபடியால் புதிய நந்தி வைக்கப்பட்டது. ஆகமங்கள் திருக்கோயிலில் ஐந்து வகையான நந்திகள் இருக்க வேண்டும் என்று விதி செய்துள்ளன. 'லிங்கத்தின் சமீபத்திலுள்ள நந்தியானது கைலாசத்தில் எப்பொழுதும் உள்ள நந்தியாகும்; இரண்டாவதான நந்தி மகாவிஷ்ணு ஈசுவரனைத் தாங்க அவதரித்த நந்தி; மூன்றாவதான நந்தி உள்ளே விடுவதற்கும் தடுப்பதற்குமுரிய அதிகாரத்தைப் பெற்ற நந்தியாகும்; நான்காவது சாதாரண நந்தி; ஐந்தாவது

விசுவரூபத்தோடு சண்டைக்கு முன் செல்லும் பெரிய நந்தி"[14] இத்திருக்கோயிலில் இரு நந்திகள் காணப்படுகின்றன என்பது குறிக்கத் தக்கது. கைலாச நந்தியும் அதிகார நந்தியுமிங்குள்ளன.

நந்தி தேவரைப் பரிவார தெய்வமாகத் திருக்கோயிலில் அமைக்காமல் இருந்ததே, திருக்கோயில் வரலாற்றில் சுட்டத்தக்க உண்மையாகும்.

"நீலகண்ட சாஸ்திரியார் முதலியோர் குறிப்பிடுவது போல நந்தி தேவர் சுற்றுக் கோயில் தேவதைகளைச் சார்ந்தவரல்லர். முற்காலச் சோழர் காலத்தில் அவருக்குப் பதிலாகப் பைரவரே சுற்றுக் கோயில் தேவதைகளைச் சார்ந்தவர் என்பது உணரப்படுகிறது"[15]

வரலாற்றறிஞரின் இந்தக் கூற்று, திருக்கோயிலில் நந்தியம் பெருமான் இல்லாமல் இருந்தமையையும் பின்னர் இடம் பெற்றமையையும் தெளிவாக உணர்த்துகிறது.இங்கிருந்த நந்தி சிதைந்து போனமையால் வேறு நந்தி கி.பி.1456இல் பிரதிட்டை செய்யப்பட்டிருக்கிறது.

கோபுரவாசலில் உட் பிரகாரத்தில் வல இடப்பக்கங்களில் சூரியனையும் சந்திரனையும் நிறுவ வேண்டும். இக்கோயிலில் சூரிய சந்திரர் இருவரும் வயிரவர் கருவறையைத் தொடர்ந்து அமைந்த சுவருக்குப் பக்கத்தில் மேற்கு நோக்கிய வண்ணம் அமைக்கப்பட்டிருக்கின்றனர். கோபுரத்துக்குப் பக்கத்தில் கருவறை அமைக்க இயலாமையால் இவ்வாறு நிழலில் இவர்கள் நிறுவப்பட்டிருக்கின்றனர்.

## 3.7. கோஷ்ட தெய்வங்கள்

கருவறை அந்தராளம் ஆகியவற்றின் வெளிப்பக்கத்தில் ஐந்து கோஷ்டங்கள் காணப்படும். தென்புறமுள்ள அந்தராளத்திலுள்ள தேவகோஷ்டத்தில் நர்த்தன கணபதியை நிறுவுவர். இது பிற்கால மரபு. ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் பாண்டியர் காலக் கோயில் ஆதலின் இக்கோட்டத்தில் எந்தக் கடவுளரும் இடம் பெற்றிலர். இதனை அடுத்துவரும் கருவறைக் கோஷ்டத்தில், தட்சிணாமூர்த்தி அமைக்கப்பட்டிருக்கிறார். தட்சிணாமூர்த்தி, கோஷ்டத்திற்கு வெளியே உயரமான மண்டபம் அமைக்கப்பட்டு அதில் வீற்றிருக்கிறார். கருவறையினின்று அமைந்த தூண்கள், சுவரால் இணைக்கப்பட்டுள்ளன. அம்மண்டபத்துக்கு முன்னே முன் மண்டபம் இரண்டு தூண்களுடன் விளங்குகின்றன. இக்கோயிலில் சுப்பிரமணியர் கோயில் கட்டப்பட்டபோது இம் மண்டபம் கட்டப்பட்டிருத்தல் வேண்டும் என்பது களவாய்வில் வெளிப்பட்டது.[16]

பாண்டியர் காலக் கோயில்களில் தட்சிணாமூர்த்தியைத் தேவகோட்டத்தில்தான் அமைப்பர். தட்சிணாமூர்த்தி வாழ்க்கை யையும் வாழ்க்கைக்கு வேண்டிய செல்வங்களையும் தருபவன் ஆதலினால் அவனுடைய சிறப்புத் தன்மையை உணர்ந்து, தேவகோஷ்டத் தெய்வங்களில் இருவருக்குத் தனி முதன்மை கொடுக்கப்பட்டது. இங்குள்ள கோஷ்ட தெய்வங்களில் இவருக்குத்தான் கருவறையை ஒட்டி மண்டபமும் மேடையும் முன் மண்டபமும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

கருவறையின் மேற்குப் புறச் சுவரில் லிங்கோத்பவர் விளங்கு கிறார். இவர் தட்சிணாமூர்த்தி போலச் சிவபெருமானுடைய ரூபபேதமாகக் கொள்ளப் பெறுபவர். ஆனாலும் இவருக்கு மண்டபமோ வேறு சிறப்பான அமைப்புகளோ இல்லை. கருவறையின் வடக்குப் புறமுள்ள தேவகோட்டத்தில் பிரம்மா விளங்குகிறார். இவரையடுத்து வடபுறமுள்ள அந்தராளக் கருவறையில் துர்க்கையின் திருமேனி அமைக்கப்படுதல் வழக்கம். இங்குத் துர்க்கையின் உருவம் தேவகோஷ்டத்தில் இடம்பெறவில்லை.

லிங்கோத்பவர், பிரம்மா இருவரும் தேவகோட்டத்தில் நிறுவப் பட்டுள்ள முறையை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, வேற்றுமை தெரிகிறது. லிங்கோத்பவர், ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறையின் புறச்சுவரில், பீடம் ஏதுமின்றிப் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளார். பிரம்மா ஒரு பீடக் கல்லின் மேல் பிரதிட்டை செய்யப்பட்டிருக் கிறார். இதனால் பிரம்மா பிற்காலத் திருப்பணியில் எழுந்தருளிச் செய்யப் பெற்றது என்பது புலனாகும். ஆனால் பிரம்மாவின் திருவுருவமைதியை நோக்கும் பொழுது இவர் பழையவரே என்று நெறியாளர் கருதுகிறார்.

## 3.8. திருச்சுற்றின் அமைப்பு

திருக்கோயிலைச் சுற்றிப் பிரகாரம் பெரியதாகவும் அழகாக வும் காணப்படுகிறது. இன்று கோயிலைக் கொண்டாடு வாரின்மையான் பிரகாரம் புல் மண்டிக் கிடக்கிறது. இங்குப் பணி புரியும் திரு.சி.பழநியப்பன் அவர்கள், சிவனடியார்கள் கோயிலை வலம் வருவதற்கு இசைவாக அவ்வப்போது துப்புரவு செய்து கோயிலைப் பேணுவது பாராட்டத்தக்கது.

> "உள் பிரகாரம் கற்ப கிரகப் பொருத்தி அளவைக் கொண்டு ½ பங்கு ¾ பங்கு 1 பங்கு 1½ பங்கு வரையில் இட வர்க்கத்தை அனுசரித்து அமைக்க வேண்டும். தவிரப் பிரகார சுற்றுப்புரத்தில் அக்கினி திக்கில் பாக சாலையும், நிருதி திக்கில் நாடக சாலையும் வாயுதிக்கில் போக சாலை (சயன சாலை) யும், ஈசானியத்திக்கில் யாக சாலையும் நிர் மிக்க வேண்டும்"[17]

என்று ஆலய விக்கிரக நிர்மாண நூல் நவிலுகின்றது. இக்கோயிலில் கருப்பக் கிரகப் பொருத்தி அளவில் 1½ பங்கு இட வர்க்கத்தைக் கொண்டு பிரகாரத்திற்கு இடம் ஒதுக்கப் பட்டிருக்கிறது.

இப்பிரகாரத்தின் ஈசான்ய திசையில் (வடகிழக்கு மூலையின்) தீர்த்தக் கிணறு வட்டமாகவும் பெரிதாகவும் காணப்படுகிறது. இதுபோன்ற அமைப்புடைய கிணறு, இராங்கியம் பூமிச்சுவரர் திருக்கோயிலிலும் உள்ளது.[18] இக்கிணற்றில்தான் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் நடராசர், சிவகாமி அம்மை ஆகியோரின் உலோகச் சிலை பெரிய மண் பானைக்குள் வைக்கப் பெற்றிருந் தது கண்டுபிடிக்கப் பட்டது. இவற்றை வைத்து இதற்கு மேல், கல்லாலான சண்டிகேசுவரர் புடைப்புச் சிற்பமாக உள்ள கல் தகடு போடப்பட்டு மூடப் பெற்றிருந்தது. இவ்வாறு இறைவன் திருவுருவங்களைப் பிரதிஷ்டைக்கு முன்னர் நீரில் வைப்பது திருக்கோயில் மரபு.

> "நதி, தடாகம், புஷ்கரிணி ஆகிய நீர் நிலையங்களில் கரையில் சுத்தமான இடத்தில் குழி தோண்டி, சிறு கிணறாக அகழ்ந்தெடுத்து அதைக் கோமயத்தினால் மெழுகி, அலங்கரித்து, விக்கிநேசுவரப் பூசை, புண்ணியாகவாசனம் முதலியன முடித்து, புனித தீர்த்தங்களால் புதிதாகமைந்த கிணற்றினை நிரப்பி, ஜலாதி வாசத்தின் பொருட்டு மூர்த்தியைப் பஞ்ச கவ்யத்தால் அபிஷேகித்து, லம்ப கூர்ச்சம் கட்டி, கீழே பலகையின் மேல் கழுத்தளவு நீரில் கிழக்கு நோக்கியவாறு இருக்கச் செய்தல் வேண்டும்"[19]

இவ்வாறு பிரதிஷ்டைக்காக வைத்திருந்த சிவகாமி அம்மை உடனாய நடராசர், என்ன காரணத்தாலோ பிரதிஷ்டை செய்யப்படாமல் நீருக்குள்ளேயே இருந்து விட்டது. அந்த நடராசர்- சிவகாமியம்மை இங்குக் கோயிலில் இப்போது வழிபாட்டில் இருக்கிறது.

கிணற்றில் கண்டெடுக்கப்பட்ட இச்சிலை பதின்மூன்றாம் நூற்றாண்டு வார்ப்புக் கலையின் சிறப்பை உணர்த்துவதாகும்.

ஸ்ரீ பாதாளேச்சுவரர் சந்நிதிக்கு நேர் எதிரே வயிரவர் சந்நிதி முன் மண்டபம் தாண்டிக் கிழக்கே உள்ள மண்டபத்தில் முதற்கண் பலிபீடமும் அதனை அடுத்து நந்தியம்பெருமானும் நிறுவப்பட்டிருக்கின்றனர். இவற்றுடன் தொடர்ந்து அமைக்கப் பட வேண்டிய கொடி மரம் இங்குக் கிடையாது.

## 4.1. விமானச் சிறப்பு

ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறையில், பிரதமம், உபானபத்மம், கண்டம், கபோதபட்டிகை, ஜெகதி, குமுதகம், பட்டிகை,

வேதிகை, ஆகிய உறுப்புகள் அமைந்திருக்கின்றன. இவை உப பீடம், அதிஷ்டானம் என்ற பகுதிகளில் அடங்கியன. பிரஸ்தரம் பகுதியில், வியாளம், கபோதகம், எழுதகம், உத்திரம் என்று உறுப்புகள் இருக்கின்றன. இடைப்பட்ட பாதவர்க்கம் பகுதியில் போதிகை, கால், வேதிகை என்பன உள்ளன. கபோதகவரியி லுள்ள கண்டில் பூ வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

பாதாளேச்சுவரர் கருவறை மீதுள்ள விமானம் ஏகதள விமானம்; இக்கோயிலில் சிவபெருமானுக்கும் அம்மைக்கும்தான் விமானங்கள் கட்டப்பட்டிருக்கின்றன. வேறு கடவுளர்களுக்கு விமானங்கள் கட்டப்படவில்லை. சிவபெருமானுக்குரிய விமான மும் மிகவும் சிதைந்து போயிருக்கிறது. விமானத்தில் இருக்க வேண்டிய ஸ்தூபியே இப்போது இல்லை. கருவறை விமானத்தில் கடவுளர் சிலைகள் அமைக்கப் பட்டிருக்கும் புதுமை நோக்கத்தக்கது.

## 5.1. மடைப்பள்ளி – மரம் – மணி

திருக்கோயிலின் தென்கிழக்கு மூலையில் பாகசாலை என்னும் மடைப்பள்ளி நல்ல உயரமான அடித்தளத்தில் அமைந்திருக்கிறது. இங்குத்தான் கோயிலுக்குத் தேவையான நைவேத்தியங்கள் அனைத்தும் தயாரிக்கப் படுகின்றன.

இக்கோயிலுக்கென்று தனியே தலவிருட்சம் இல்லை இக்கோயிலின் மேற்குப் பிரகாரம் முழுமையும் நெல்லி மரங்கள் வளர்ந்தோங்கியிருக்கின்றன. இவை தொன்றுதொட்டுத் தாமே வளர்பவை. இந்த நெல்லி மரங்கள் இக்கோயிலுக்குரிய தல விருட்சம் என்று கூறுகின்றனர்.[20]

அம்மன் சந்நதிக்கும் வயிரவர் சந்நிதிக்கும் இடைப்பட்ட பகுதிக்கு எதிர்ப்புறத்திலுள்ள இரண்டு தூண்களுக்கிடையே பெரிய மணி ஒன்று தொங்கவிடப்பட்டிருக்கிறது. இது குறைவான உயரத்திலேயே தொங்குகிறது. இம்மணியில் விகாரி வருடம் ஐப்பசி மாதம் 26ஆம் தேதி 12.11.1959 ராங்கியம் நா.ராமசாமி சேருவை உபயம்[21] என்று பொறிக்கப்பட்டிருக்கிறது.

திருக்கோயிலில் தலையாய வாயிற்படி உயரமாக கட்டப் பெற்றிருக்கிறது; அந்நிலை மீது ராச கோபுரம் எழுப்பபட வில்லை அந்த வாயிலிலிருந்து நூற்றுப் பத்தடி நீளத்திற்கு ஒட்டுவாரம் மிக உயரமான தூண்களைக் கொண்டு அமைக்கப் பட்டிருக்கிறது. இவ்வாரத்திற்குள் உள்ள திண்ணையிலேயே திருக்கோயில் திருவிழாவுக்குரிய வாகனங்கள், சூரன், தேர் இழுக்கும் சங்கிலி, என்றிணைய பொருள்கள் சேகரித்து வைக்கப் பெறுகின்றன.

திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக்கோயில் பழமையும், புதுமையும் கலந்து பல்வேறு கட்டடங்களுடன் திகழ்கின்றது. இத்திருக் கோயிலுக்குரிய தேர், கோயிலுக்கு எதிரில் நிற்கின்றது. தேரை நிறுத்த 'தேர் மூட்டி' என்று தனியே மேடை மண்டபம் இல்லை. தேரைச் செம்மையான இடத்தில் நிறுத்தி பாதுகாக் காமையால், தேர் சிதைந்து போய் விட்டது. இதில் உள்ள மரச் சிற்பங்கள் பலவும் திருடு போய்விட்டன.

## 6.1. சீற்றத்தை அடக்கும் செல்லப் பிள்ளையார்

சிவன் கோயிலுக்கு நேரே தீர்த்தக் குளம் இருக்க வேண்டும். திருமாவில் கோயிலுக்கு நேர் எதிரே வயல் வெளிதான் உள்ளது; குளம் இருந்த அடையாளமோ வேறு குறிப்போ இல்லை. திருக் கோவில் தீர்த்தவாரிக்குச் சுவாமி கோயிலுக்கு பின்புறமுள்ள க்ண்மாய்க்கே செல்கிறது. திருக்கோயிலுக்கே நேர் எதிரே- சுவாமி சந்நிதிக்கு- நேரில் வயலில் உழுதவனும் அவனுடைய காளை களும் இறந்தன; அப்பகுதியில் பயிரிட்டால் பயிர் எரிந்து நெல் விளையாது. ஸ்ரீ பாதாளேச்சுவரரின் நேர்பார்வையே இதற்குக் காரணம் என்று மக்கள் கருதி அவர் சந்நிதிக்கு நேரே ஸ்ரீ விநாயகர் கோயில் ஒன்று கட்டியிருக்கின்றனர்.

இந்த விநாயகருக்குத் தனியே பெயர் ஏதும் வழங்கவில்லை. இக்கோயில் கருவறையும் முன் மண்டபமுமாக உள்ளது. கோயில் அடித்தளம் மிக உயரமானது. கருவறையின் மீது விமா னம் கட்டப்பட்டிருக்கிறது. கல்வெட்டுகளோ வேறு சிற்பங்களோ இல்லை. திருக்கோயில் கட்டப்பட்ட காலத்திலேயே, இவ் விநாயகர் கோயில் கட்டப்பட்டிருக்க முடியாது.

திருப்பாதளேச்சுவரரின் சீற்றத்துக்கும் கோபத்துக்கும் அஞ்சிய மக்கள், அப் பெருமானுடைய சீற்றத்தை மாற்றிட அவர் மகனா்ன விநாயகப் பெருமானையே நேரே பிரதிட்டை செய் திருக்கின்றனர். இதே போலப் பல கோயில்களில் மூலமூர்த்தியின் ஆக்ரோசத்தைத் தணிக்க விநாயகரை நேரே எழுந்தருளச் செய்திருக்கின்றனர். இத்தகைய நிகழ்ச்சி ஒன்றைக் காஞ்சி மா முனிவர் குறிப்பிடுகின்றார்.

"ஜம்புகேச்வரத்தில் (திருவானைக்காவில்) இருக்கப்பட்ட அகிலாண் டேசுவரி கலி காலத்தில் ஜனங்கள் போகிற போக்கைப் பார்த்து... உக்ரக்கோலமாகஆகிவிட்டாள். ஸகல சக்தியும் அவள்தானாகை யால் அன்பில் பரமஸௌம்யமான லலிதாம்பாளாக இருக்கப்பட்ட அவளே கோபம் வந்தால் அதன் உச்சியில் காளியாகியிருப்பாள்... (காஞ்சி) ஆச்சார்யாள் அங்கே வந்தார். பரமேச் வர வதாரமானதால் அவரால் உக்ர லோகத்திலிருக்கிற அம்பாளிடமும் போக முடியும். ஆனாலும் அவர் இந்தஸந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு,

பிள்ளையாரின் அன்பு மனப் பெருமையை உலகத்துக்குத் தெரிவிக்க நினைத்தார். அதனால் அம்பாளுக்கு நேர் எதிரே, கோவில் முடிந்து மதில் வந்து விடுகிற அவ்வளவு தூரத்திலே, பெரிசாக ஒரு பிள்ளையாரைப் பிரதிஷ்டை பண்ணிவிட்டார். அவ்வளவுதான், செல்லப்பிள்ளை எதிரே இருக்கிறான் என்றதும் அம்பாளுடைய அத்தனை உக்ரமும் போன இடம் தெரியாமல் போய்விட்டது... அப்படிப்பட்ட பிள்ளையின் அன்பு மன விசேஷத்தால் அம்பாளுக்குக் கோபம் போய் வாத்ஸல்யம் பிறந்தது"[22]

*கோயில்களிலுள்ள தெய்வங்களின் உக்ரகோலத்தை- கோபத்தை- மாற்ற அத்தெய்வங்களுக்கு எதிரே விநாயகரை நிறுவுவது மரபாகவுள்ளது. இராயவரம் வெ.மு.சிவன் கோயிலிலும் சிவபெருமான் சந்நிதிக்கெதிரே விநாயகர் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறது. இதுவும் சிவபெருமானுடைய உக்ரத்தைத் தணிக்கவேயாகும். திருமாவிலும் திருப்பாதாளேச்சுவரர் தம் உக்ரத்தைத் தணிக்க விநாயகர் பிரதிஷ்டையாகியிருக்கிறது. விநாயகர் பிரதிஷ்டைக்குப் பின் சந்நிதிக்கு நேர் எதிரிலுள்ள வயல்களில் எவ்வகையான அசம்பாவிதங்களும் நிகழவில்லை. இவ் விநாயகர் கோயிலும் பாதாளேச்சுவரர் திருக்கோயிலுக்குக் கட்டுப்பட்டதே.*

## 6.2. பிரதான வாயிலுக்கு முன்னுள்ள ஓட்டுக் கொட்டகை

*கோயிலுக்கு முன்னுள்ள ஓட்டுக் கொட்டகையின் தென்புறம் விநாயகர், நாகர், பெருச்சாளி ஆகியன உள்ளன. இவை ஏறத்தாழ அறுபது ஆண்டுகளுக்கு முன் இங்குக் கொண்டு வந்து வைக்கப்பட்டவை. இத்திருவுருவங்கள், மேலத் திருமாவிலிருந்து கிழத் திருமாவுக்குப் போகும்போது வயலுக்கு நடுவிலுள்ள ஊருணிக் கரையிலிருந்தவை. இவ்வூருணிக்குத் தண்ணீ(ர்) ஊருணி என்று பெயர். இவ்வூருணியின் வடகரையில் ஒரு பிள்ளையார் கோயில் இருந்து அழிந்து போய்விட்டது. அக்கோயிலுள்ள ஒரு கல்லில் கல்வெட்டு ஒன்று இன்றும் காணப்படுகிறது. அதுவும் படி எடுக்கப்படாத கல்வெட்டு. அக்கோயில் சிதைந்து போன பின் அங்கிருந்த சிலைகள் இங்கு கொண்டு வந்து வைக்கப்பட்டன என்று தெரிகின்றது.[23]*

*இக்கோயிலுக்கு எதிரில் ஊருணி இல்லை; கோயிலின் பின்புறம் உள்ள கண்மாயே தீர்த்தமாகப் பயன்படுத்தப்படுகிறது. அபிஷேகத்துக்குரிய தீர்த்தமாகத் திருக்கோயில் கிணற்று நீரே விளங்குகிறது.*

## 7.1. இல்லாதன

*பொதுவாகச் சிவன் கோயிலைச் சுற்றி நான்கு திசைகளிலும் அகலமான தேரோடும் வீதிகள் காணப்படும். இத்திருக் கோயிலில் தேரோட்டமிருந்தும் கோயிலைச் சுற்றித் தேரோடும் வீதி இல்லை; காடும் மேடுமாக உள்ள பகுதியே, தேரோட்டத் துக்குரியதாகத் தயார் செய்யப்படுகிறது.*

*எல்லாச் சிவன் கோயிலிலும் பள்ளியறை இருக்கும்; பள்ளி யறைக்குத் திருக்கோயிலில் தனி அலங்காரங்களும், பல்லக்கும், ஊஞ்சலும் அமைந்திலங்கும் திருமா ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக் கோயிலில் 'பள்ளியறை' இல்லை; ஆகமம் வல்ல 'சிவாச்சாரி யார்கள் பள்ளியறையின்றிச் சிவன் கோயில்கள் இருத்தல் கூடா' என்றுரைக்கின்றனர்.[24] ஆனால் ஸ்ரீ பாதாளேச்சுவரர் திருக் கோயில் சிவாச்சாரியார், பள்ளியறைக்கு எழுந்தருளுகின்ற போக சக்தியம்மன், பள்ளியறைச் சொக்கர், பல்லக்கு முதலியன இங்கு இன்மையால் 'பள்ளியறை' இல்லை என்று தெரிவிக்கின்றார்.[25] இக்கோயிலில் போலவே கல்லாங்குடி ஸ்ரீ பாகாதீசுவரர் திருக்கோயிலிலும் பள்ளியறை இல்லை. பள்ளியறை இல்லாமல் திருக்கோயில் இருக்கலாம் என்று சிவாச்சாரியார் கூறுகிறார். தொன்று தொட்டு இக் கோயிலில் பள்ளியறை இல்லை என்பதுதான் உண்மை.*

*அறுபத்து மூவரில் எந்த நாயன்மார்க்கும் கல்லில் வடிக்கப் பட்ட திருவுருவச் சிலை ஏதும் இங்குக் கிடையாது. சிவபெரு மான், விநாயகர், முருகன் சந்நிதிகளில் துவாரபாலகர் இல்லை; அம்மை சந்நிதியிலும் துவாரபாலகி இல்லை. வயிரவர் சந்நிதியில் மட்டும், சுதையாலானத் துவார பாலகர் திருவுருவம் அமைக்கப்பட்டிருக்கிறது.*

*கி.பி. 1947ஐ ஒட்டி நடைபெற்ற குடமுழுக்கின் போது அமைக் கப்பட்டது இச் சுதை வடிவமும் நாளடைவில் சிதைந்துவிட்டது.*

*இக்கோயிலில் திருவிழாக்கள் நடைபெறுகிறது. ஆயினும் கோயிலில் கொடிமரம் இல்லை.*

> "கோயிலில் த்வஜஸ்தம்பமானது கோபுரம் அல்லது விமானத்தைப் போன்று நெடிது உயர்ந்து, நந்திக்கு எதிரிலோ பின்னரோ, முக்கிய கோபுரத்துக்கு அருகில், உட்பிரகாரத்திலோ வெளிப் பிரகாரத்திலோ அமையும். பெரும்பாலான கோயில்களில் கோபுரத்துக்கும் பலிபீடத்துக்கும் இடையில் காணப்படும் த்வஜஸ்தம்பமே 'ஈச்வரன்' 'பதி' என்பதையும் உணர வேண்டும். பலிபீடம், த்வஜஸ்தம்பம், நந்தி மூன்றும் ஒரே நேர்க் கோட்டில் உள்ளவை என்பதைக் கவனிக்க வேண்டும்."[26]

சான்றோர்களும் ஆகமங்களும் திருக்கோயிலுக்குத் திருவிழா நடத்தக் கொடி மரம் வேண்டும் என்று வலியுறுத்த, பல்வேறு ஊர்களில் கொடி மரமின்றித் திருவிழா நிகழ்த்துகின்றனர்.[27] அவ்வணம் இக்கோயிலிலும் கொடி மரமின்றித் திருவிழா நடைபெறுகின்றது. இங்குக் கொடி மரமிருந்து சிதிலமாகியிருக்க வேண்டும் என்று மீண்டும் அதனை பிரதிட்டை செய்யவில்லை என்றும் நெறியாளர் கருதுகின்றார்.[28]

திருக்கோயிலுக்கு நான்கு திசைகளிலும் வாயில்கள் உண்டு. இங்குக் கிழக்கு வாசல் மட்டுமே உள்ளது. இராஜகோபுரம் கட்டுதற்குரிய அடித்தளத்துடன் விளங்குகிறது.

## இவ்வியலில் கூறப் பெற்ற கருத்துகள்

1. கோயில் ஊருக்கு வடகிழக்கில் இருக்க வேண்டும். இன்று திருமா ஊர் இடம் மாறிவிட்டது. எனவே கோயில் ஊருக்கு வடக்குப் பக்கமாக உள்ளது. திருக்கோயிலின் அடித்தளம் மிகக் குறைவான உயரமுடையது.

2. ஸ்ரீ பாதாளேச்சுவரர் கருவறை செவ்வகமாக விளங்குகிறது அந்தராளமும் முன் மண்டபமும் உள்ளன. முன் மண்டபத்தில் நடராஜர் வீற்றிருக்கிறார். நடராஜருக்குத் தனியே சபா மண்டபமோ வேறு சிறப்பான மண்டப அமைப்போ இங்கு இல்லை. முன் மண்டபமும், அம்மன் முன்மண்டபமும் பிற்காலத்தில் இணைத்துக் கட்டப்பட்டிருக்கிறது. இதுவே சபாமண்டபம்.

3. முன் மண்டபத்தில் நிலவறை உள்ளது.

4. பரிவாரக் கோயில்களில் விநாயகர், சண்டிகேசுவரர் பழமையானவை; அம்மை, வயிரவர் அடுத்த வளர்ச்சி; சுப்பிரமணியர், நந்தி அதன்பின் பிரதிட்டை செய்யப்பட்டன; அதன்பின்னர் அமைந்தது சுப்பிரமணியர் சந்நிதி.

5. காலந்தோறும் சிறு சிறு திருப்பணிகள் இக்கோயிலில் நடைபெற்றிருக்கிறது. எனினும் முழுமையாகக் கோயில் பிரித்துப் பழுதுபார்க்கப்படவில்லை.

6. கோயில் பரந்துபட்ட நிலப் பரப்பில் உயரமான மதிற் சுவர்களுடன் விளங்குகிறது. திருக்கோயிலைத் திருப்பணி செய்ய விரும்பியவர் களுக்கு ஸ்ரீ பாதாளேச்சுவரர் இசைவு தராமையால், திருக்கோயில் முன் மண்டபத்தைக் கட்டியுள்ளனர்.

7. ஆகம முறைப்படி பரிவாரத் தெய்வங்கள் அமைந்திருக்கின்றன சந்திரன், சூரியன் வாயிற்படிக்கு அருகில் இருபுறமும் இல்லை.

8. இங்குக் குறிப்பிடத்தக்கவாறு இல்லாதன:

   அ) நவக்கிரகம்

ஆ) அறுபத்து மூவர் திருமேனி

இ) பள்ளியறை

ஈ) கொடிமரம்

உ) திருக்குளம்

## அடிக்குறிப்புகள்

1. பி.ஆர்.ஸ்ரீனிவாசன் (1959)-நாம் வணங்கும் தெய்வங்கள் கலைஞன் பதிப்பகம், சென்னை ப.87
2. வை.மு.கோபாலகிருஷ்ணசாமியார் (பதி:1961)- பத்துப்பாட்டு திருமுருகாற்றுப்படை, வை.மு.நரசிம்மன் சென்னை-5 பா.அடி. எண்.217
3. பி.ஆர். ஸ்ரீனிவாசன் (1965)- கோயிற்கலையும் சிற்பங்களும் கலைஞன் பதிப்பகம், சென்னை ப.177
4. டி.பி.கணேசமூர்த்தி (1959) ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்ப இரகசியம் மூர்த்தி சில்பகலாசாலை, சென்னை ப.22
5. சி. சுவாமிநாத சிவாச்சாரியார் (1960) ஆகம வசன பூஷணம் தென்னிந்திய அர்ச்சகர் சங்கம் ப.14
6. பி.ஆர்.ஸ்ரீனிவாசன் (1965) கோயில்களையும் சிற்பங்களும் ப.63
7. மேலது. ப.93
8. திருக்கோயில் சிவாச்சாரியார் சுப்பிரமணியக் குருக்கள் தெரிவித்தார்.
9. டாக்டர் தே.சொக்கலிங்கம் 22.12. 95 அன்று கட்டுரையாக்கத்தின் போது கூறியது.
10. கல்வெட்டுகள் பின்னிணைப்புக் காண்க.
11. .......... (1929) Inscriptions (Texts) of pudukkottai state. pudukkottai printed at the sri brihadamba state press.
12. இங்கு பாண்டியர் கோயில்களில் சேஷ்டாதேவியை நிறுவுவர். அதுபோலச் சிலைகள் இல்லை. வெற்றிடமாக இருந்ததிலேயே கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும்.
13. கல்வெட்டு எண்:795 "இனமேவு" என்று தொடங்கும் பாட்டு
14. சி.சுவாமிநாத சிவாச்சாரியார் (1960) -ஆகம வசனபூஷண ப.18
15. எஸ்.ஆர்.பாலசுப்பிரமணியம் (1966) சோழர்கலைப்பான பாரிநிலையம், சென்னை ப.215

16. கட்டிடம் கட்டியிருப்பதை உற்றுநோக்கினால் கட்டுமானமே வேற்றுமையைக் காட்டுகிறது.

17. டி.பி. கணேசமூர்த்தி(1959)-ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்ப இரகசியம். பக்.49-50

18. வகுப்பு மாணக்கர்களுடன் கள ஆய்விற்குச் சென்ற போது கண்ட உண்மை. வகுப்புத் தோழி திருமதி. இந்திரா அவர்கள் இக்கோயிலை ஆராய்கின்றார்.

19. கா.கைலாசிநாதக் குருக்கள் (1963) சைவத்திருக்கோயில் கிரியை நெறி. ப.312

20. தகவலாளி திரு.பழநியப்பன்

21. மணியில் பொறிக்கப்பட்டிருக்கிறது. ஆய்வாளர் பார்த் தெழுதினார்.

22. ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி (1991) தெய்வத்தின் குரல் ஐந்தாம் பகுதி. வானதி பதிப்பகம். சென்னை பக்.6-7

23. தகவலாளி தே.சொக்கலிங்கம்

24. சிவஸ்ரீ. ரமணி சிவாச்சாரியார் பேட்டியில் சொன்னது.

25. திருக்கோயில் சிவாச்சாரியார் கூறியது.

26. எஸ்.எஸ். ஜானகி (1988)- கொடிமரம் கே.எஸ். ரிசர்ச் இன்ஸ்டியூட். சென்னை 4 ப.63

27. வலையபட்டி, வேந்தன்பட்டி சிவன் கோயில்களில் கொடிமரம் இல்லை. திருவிழா நடைபெறுகிறது.

28. தே.சொக்கலிங்கம் கூறியது.



18
௨௨
௨0
19
1
௨1
2
௨3
3
4
5
6
7
8
10
16
9
11
15
14
13
12
௨5
17
௨6
௨4
௨8
௨7
கிராங்கியம் சாலை
30

# வரைபட விளக்கம்

1. கருவறை
2. அந்தராளம்
3. விநாயகர்
4. சபாமண்டபம்
5. சுரங்கம்
6. வெற்று அறை
7. உற்சவத் திருமேனி
8. அம்மை
9. வயிரவர்
10. முன்மண்டபம்
11. சனீஸ்வரன்
12. விநாயகர்
13. சப்தகன்னிகள்
14. சூரியன்
15. சந்திரன்
16. கருப்பர்
17. மடைப்பள்ளி
18. விநாயகர் சந்நிதி
19. தெட்சிணாமூர்த்தி சந்நிதி
20. அண்ணாமலையார்
21. பிரம்மா
22. முருகன் சந்நிதி.
23. சண்டேசுவரர் சந்நிதி
24. கிணறு
25. நந்தி
26. பலிபீடம்
27. வெளிமண்டபம்
28. விநாயகர்
29. விநாயகர் கோயில்
30. பழுதடைந்த தேர்.

## நான்காமியல்

# தெய்வத் திருவுருவ அமைதி

## நான்காமியல்

# தெய்வத் திருவுருவ அமைதி

### 4.0. கோயிலும் உருவமும்

கண்ணுக்குத் தெரியாத, மனம் வாக்குகளுக்கு எட்டாத முழுமுதற் பொருளை மூன்று நிலைகளிலும் சான்றோர் உணர்த்தினர். அவை அருவம், உருவம், அருவுருவம் எனப்படும். கட்புலனாகும் வடிவத்தை உருவம் என்றும் கட்புலனாகாத வடிவை அருவம் என்றும் இரண்டு பண்புமுடைய ஒன்றை அருவுருவம் என்றும் சிற்ப நூல்கள் செப்புகின்றன. திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் இடம்பெற்றுள்ள தெய்வத் திருவுருவங்களின் திருவுருவ அமைதி ஈண்டு விளக்கப் பெறுகின்றது.

திருக்கோயில் கட்டுவதற்கும், அக்கோயிலில் எழுந்தருளும் திருவுருவத்துக்கும், ஊருக்கும், திருக்கோயில் கட்டுவோனுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. திருக்கோயிலை மனம்போனவாறு கட்டுவதோ நினைத்த திருவுருவங்களைக் கோயிலில் நிறுவுதலோ ஊருக்கும் மக்களுக்கும் தீமை விளைவிக்கும். எனவே கருத்தா நட்சத்திரம், வாஸ்து நட்சத்திரம் (ஊர் நட்சத்திரம்), சுவாமி நட்சத்திரம் (பிம்ப நட்சத்திரம்) ஆகிய மூன்றையும் அறிந்து அதற்குப் பொருத்தமாகப் படிமத்தின் உயரத்தை வகுக்க வேண் டும். இப்படி வகுக்கப் பட்ட உயரமானது, கட்டப்பட்டிருக்கின்ற கோயிலின் உள் அளவு, வாயில் அளவு ஆகியவற்றையும் அடிப் படையாகக் கொண்டிருக்கும். இவ்வாறு கணக்கியல் அடிப்படை யில், கோயில் அமைப்புகள், பரம்பரையாக வருகின்றன, ஓரடிப்படையில்தான் தமிழகக் கோயில்களும் திருவுருவங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

### 4.1. படிம வகை

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் உள்ள தெய்வப் படிமங்களை மூன்று வகைப்படுத்திக் காண முடியும். அவையாவன,

1. மூலப் படிமம் 2. பரிவாரப் படிமங்கள் 3. உற்சவப் படிமங்கள்

*இத்திருக்கோயிலின் ஆதிமூர்த்தியும் மூலமூர்த்தியும் திருப் பாதாளேச்சுவரரே. இவர் தானே தோன்றிய சுயம்புமூர்த்தி. இம்மூர்த்திக்குரிய ஆவுடையார் சதுரமாகும். பீடத்தின் மேல் மட்டத்தில் திருமஞ்சன நீர் வெளியே ஓடிவர நீர்த்தாரை அமைக்கப்பட்டிருக்கிறது. இங்குள்ள பீடம் பத்ர பீடமாகும். லிங்கத்தின் சுற்றளவு வட்டமாகவும். அதிகக் கனமின்றியும் இருக்கிறது. லிங்கத்தின் உயரம் பீடத்தைவிட மிக உயரமாகும். லிங்கத்தின் உயரம் பற்றிய பின்வரும் கருத்து இங்குக் குறிப்பிடத் தக்கது.*

"திருக்கோயில்களில் காணப்படும் சிவலிங்கங்கள் அனைத்தும் தோற்றத்தில் ஒரே விதமாய் இருப்பதில்லை. குறிப்பிடப்பட்ட விதியின்படி பல்வகை நிலையில் விளங்குகின்றன. இவற்றின் ஆவுடைக்கு மேல் விளங்கும் பூசாபாகம் (பாணம்) உயர் அளவில் மாறுபடக் காணலாம். சில மிக அதிக உயரமாகவும் காணப்படும். சில குட்டையாகவும் இருக்கும் இந்த மூவை உயரங்கள் காட்டும் கோலங்கள்.

1. *மிக உயரமானது- நின்ற கோலம்*
2. *நடுத்தரமானது- அமர்ந்த கோலம்*
3. *மிகச் சிறிய அளவு உயரம்- கிடந்த (சயனக்) கோலம்."[1]*

*இந்த அடிப்படையில் நோக்கும் பொழுது, திருமா திருப்பாதாளேச்சுவரர் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார் என்பது புலனாகும்.*

*இந்த லிங்கத்தின் பூஜாம்சத்தில் ஒரு பள்ளம் காணப்படுகிறது. லிங்கத்தையும் பீடத்தையும் பொருத்த எண்மருந்து பொதியப் பட்டிருந்தது, அது காலப் பழமையால் இப்போது சிதைந்து விட்டது. அதனால் இப்போது லிங்கத்திற்கும் ஆவுடையாருக்கு மிடையே வெளி காணப்படுகிறது.*

## 4.2.இறைவன் திருப்பெயர்

*இச்சிவபெருமான் பெயர், கல்வெட்டுகளில் 'திருப்பாதாளேச் சுவரர்' என்று காணப்படுகிறது. கி.பி. 1455இல் பொறிக்கப்பட்ட சுப்பிரமணியர் கருவறை கல்வெட்டில் 'துறுமா வீசர்' என்று சுட்டப்பட்டுள்ளது. புதுக்கோட்டை மாவட்ட அறநிலையத்துறை ஆவணங்களில் 'சுந்தரேசர்' என்று பதியப்பட்டிருக்கிறது. காலஞ் சென்ற பெரியசாமி அம்பலகாரர் இச்சிவபெருமான் பெயர் 'திருமேனி நாதர்' என்று கூறியதாக டாக்டர் தே.சொக்கலிங்கம் கூறுகிறார்.[2] இதற்கெல்லாம் அடிப்படை, இக்கோயில் வயிரவன் கோயில் என்று வழங்குவதேயாகும்.*

*கல்வெட்டுக் கூறும் பெயரான திருப்பாதாளேச்சுவரர் என்ற பெயர் பாடல் பெற்ற பாமணி இறைவன் பெயரை நினைப்பூட்டு வதாக அமைகின்றது. பாதாள உலோகத்திலிருந்து ஆதி சேடனது தம்பியாகிய தனஞ்சயன் என்ற பாம்பு பீடத்தின் வழியே வந்து வணங்கிப் பேறு பெற்ற தலம் பாம்புணி என்னும் பாமணி இது சோழ நாட்டுத் தென்கரைத் திருத்தலம். இதனைத் திருஞான சம்பந்தர்.*

"அங்கமும் நான்மறையும் அருள்செய் தழகார்ந்த அஞ்சொல்
மங்கைக்கோர் கூறுடையான் மறையோன் உறைகோயில்,
செங்கயனின்று களுஞ் செறுவிற் றிகழ்கின்ற சோதிப்
பங்கயம் நின்றலரும் வயல்சூழ்ந்த பாதாளே"[3]

*என்று பாடுகின்றார். சீரும் சிறப்பும் பெற்ற இத்தலத்திறைவன் மீது பற்றுக் கொண்ட மெய்யன்பர் ஒருவர், அவ்விறைவன் பெயரை இட்டு இத்திருக்கோயிலை அமைத்துக் கொண்டாடி யிருக்க வேண்டும்.*

*திருமாத்திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில், கோயிலுக் குள் நிலவறை இருக்கிறது. இந்நிலையில் தூர்வாச முனிவர் இன்றும் தவத்தில் இருப்பதாக மக்கள் நம்புகின்றனர். பாதாளத் திறைவன் என்று கூறுவதற்குத்தக நிலவறை காணப்படுகிறது. இச்சிவபெருமான் எப்பெயரால் போற்றப் பெற்றாலும் இவர் அருள்பாலிக்கும் ஆற்றல் மிக்கவர் என்பது வெளிப்படை.*

## 4.3. அம்மையின் அரிய தோற்றம்

*திருப்பாதாளேச்சுவரர் உடனமர்ந்த அம்மை 'சகஜாிநாயகி' என்று சொல்லப்படுகிறாள். இந்த அம்மை ஒரு பீடத்தின் மீது நின்ற கோலத்தில் காட்சி தருகின்றாள். தலையில் கரண்ட மகுடம் அமைந்திருக்கிறது. இந்த அம்மைக்கு இரண்டு கைகள். திரு.என் சேதுராமன்.*

"பாண்டிய நாட்டுப் பெண் தெய்வங்களுக்கு இரண்டு கைகள்தாம் உண்டு. அவ்விதமே மீனாட்சி அன்னைக்கும் இரண்டு கைகள்தாம் உண்டு.... சோழ நாட்டுப் பெண் தெய்வங்களுக்கு நான்கு கைகள் உண்டு."[4]

*என்று எழுதுவர். பாண்டிய நாட்டில், பெரும்பாலான அம் மன்களுக்கு இரண்டு கைகளே காணப்படுகின்றன. அம்மனின் வலக்கை, குவளை மலரைக் கையில் பிடித்த வண்ணம் இருக்கும். குவளை மலரின் உச்சி அம்மன் தோள் மட்டத்திற்குச் சரியாக உள்ளது. இடக்கை கீழே தொங்கவிட்டவாறு காணப்படுகிறது. இவ்வம்மை தெற்குநோக்கிய வண்ணம் காட்சி தருகின்றாள்.*

## 4.3.1.ஸ்தித குஞ்சிதம்

*சிவன் கோயிலில் பரிவார தெய்வமான அம்மை, தனிச் சிறப் புடையவள்; இக்கோயிலில் இருக்கும் பெண் தெய்வம் ஒன்றே; வேறு பெண் தெய்வங்கள் (சப்த கன்னியர் அன்றிப்) பிறரில்லை. எல்லாச் சிவன் கோயில்களிலும் அம்மையின் திருவுருவம் அமைக்கப்பெறும். இதனைச் சமபாத ஸ்தானகம் என்பர்.*

> "தலையையும் உடலையும் நேராகநிமிர்த்தி ஒருபாற் கோடாமல், சமநிலையில் கைகளையும் கால்களையும் அமைத்து நேர்நோக்கு டையதாக அமையும் சிற்ப அமைதிக்குச் சமபாத ஸ்தானகம் என்று பெயர்"[5]

*இவ்வாறு அமைந்த இறைவியின் உருவமே கருவறையின் அருள் பொழியும். ஆனால் இங்குள்ள அம்மையின் உடலில் ஒடிவு வளைவுகள் மிதமாக அமைந்துள்ளன. இதனை ஆபங்கம் என்பர், சிற்பிகள். அம்மை ஒரு காலை நன்றாக ஊன்றி மற்றொரு காலைச் சிறிதே மடக்கி உடலை வளைவோடு அமைத்து நிற்கிறாள் இவ்வடிவில் ஒரு காலை நிலையாகவும் மற்றொரு காலை மடக்கியும் குஞ்சிதமாகவும் அமைப்பதால் இதனை ஸ்தித குஞ்சிதம் என்று அழைப்பர். சகஜரி நாயகியின் அழகு தனிச் சிறப்புடையாதாகப் பொலிகின்றது.*

## 4.3.1.1. திருவுருவ உண்மை

*ஒரு படிமத்தைச் சமபங்கமாக அமைப்பதைவிட ஆபங்கமாக அமைத்தால், அன்பும் அமைதியும் அதில் பொருந்திச் சாத்விக பாவம் பொலியும். இப்பங்க அமைப்பில் முகம் அமைதியுடனும் கண்கள் கருணையுடனும் இதழ்கள் புன்முறுவலுடனும் காட்சி தருகின்றன.[6] அம்மையின் கழுத்திலும் கைகளிலும் பல்வேறு அணிகலன்கள் காட்சியளிக்கின்றன.*

## 4.4. வயிரவர் சிறப்பு

*இக்கோயிலில் வீற்றிருக்கும் வயிரவருக்குத் தனிச் சிறப்பு உண்டு. இந்த வட்டாரத்து மக்கள், இப்பெருமானுக்கே பெரிதும் அஞ்சி நடுங்குகின்றனர்.*

*வயிரவருக்குக் கபால வயிரவர், சேத்ரபாலகர், பிரம்மா சிரஸேதமூர்த்தி என்று பல பெயர்களுண்டு. இவ்வயிரவர் பீடத் தின் மீது நின்ற கோலத்தில் அருள் புரிகின்றார். இவர் பிறந்த மேனியாக விளங்குகிறார். தலையில் அக்கினி மகுடம் திகழ வலக் காதில் மகரகுண்டலமும் இடக்காதில் பத்ர குண்டலமும் திகழ்கின்றன. கழுத்தில் கண்டசரமும் தோளில் தோள் வளையும்*

கையில் காப்பும் அழகு செய்கின்றன. இடுப்பிலிருந்து முழங்கால் வரை சலங்கை மணிக் கோவை தொங்குகிறது.

இப்பெருமானுக்கு நான்கு கைகள்; கீழ் இடக்கையில் கபாலமும் மேல் இடக்கையில் நாகமும் கீழ் வலக்கையில் சூலமும் மேல் வலக் கையில் உடுக்கையும் காணப்படுகின்றன. இவ்வயிரவர் திருவுருவில் அபயகரமோ வரதகரமோ இல்லை. வயிரவருக்கு ஆறு கைகள் இருப்பின் அப்பெருமான் ராஜஸ மூர்த்தியாவார். ஆறு கைகள் அமைந்து, வலது கையில் வில்லும் இடது கையில் அம்பும் இருந்தால் அந்த வயிரவர் தாமஸமூர்த்தி யாவார். திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் பிரதிட்டை செய்யப் பெற்றுள்ள வயிரவர் சாத்விகமூர்த்தி யாவார்.[7]

வயிரவருக்குப் பின்புறம் நாய் நின்ற நிலையில் உள்ளது. வயிரவரின் இடப்பக்கம், நாயின் தலை காணப்படுகிறது. வலப் பக்கம் வால் இருக்கிறது. வயிரவர் கையிலுள்ள கபாலத்தை நாய் நாக்கால் நக்கும். சூரக்குடியிலுள்ள வயிரவரின் சிலையில் இதை நன்றாகக் காணமுடியும்.[8] திருமா வயிரவர் சிலையில், கபாலத்தை நாய் நக்குவதைக் காணமுடியவில்லை. இலுப்பைக் குடி வயிரவர் திருவுருவத்தில் இரண்டு நாய்கள் காணப்படினும் ஒன்றும் கபாலத்தை நக்கவில்லை.[9]

திருமா வயிரவரும் அவருடைய வாகனமும் ஒரே கல்லில் செதுக்கப் பட்டிருக்கின்றனர். திருவுருவத்தில் எங்கும் திறப்புக் கிடையாது. நாயின் தலை இடம் மாறியிருக்கிறது.

இந்த வயிரவருக்கு முன் முத்தலைச் சூலம் ஒன்று காணப்படு கின்றது. இவர் சந்நிதியில், பொதுமக்கள், சாம்பிராணிப் புகையூட்ட ஓமகுண்டம் ஒன்றை நிறுவியுள்ளனர். அதன் எதிரே ஒரு முத்தலைச்சூலம் ஒன்று நடப்பட்டிருக்கிறது.

## 4.5. விநாயகப் பெருமான்

முதற்கட்டத் திருப்பணிக் காலத்தில் அமைந்த பரிவார தெய்வங்களில் ஒருவர், விநாயகர். இவருக்கென்று தனியே பெயர் கிடையாது; இவரை விநாயகர் என்றே கூறுகின்றனர். இவ் விநாயகர் முக்குறுணி விநாயகர் போலப் பெரிய வடிவமுடை யவர். யானை முகமும் உருண்டையான பருத்த தொந்தியும் நான்கு கைகளும் இவருக்கு உரியன. ஒரு காலைப் பீடத்தின் மீது குத்திட்டு வைத்து இன்னொரு காலைப் பீடத்தின் மீது படுக்கையாக வைத்திருப்பார். இதற்கு லளிதாசனம் என்று பெயர்.

விநாயகப் பெருமானுக்கு நான்கு கைகள்; பாசம், அங்குசம், ஒடிந்த கொம்பு, மோதகம் என்பன காணப்படும். இவர் முகம்

யானை முகமாகவும் உடல் மனித உடலாகவும் தலையும் காதும் யானைத் தலையாகவும் காதாகவும் விளங்குகின்றன. வயிறு மிகப் பெரியதாக நன்கு உருண்டு திரண்டு இருக்க, தலையில் கரண்ட மகுடம் திகழும். கையிலுள்ள மோதகத்தை விநாயக ருடைய தும்பிக்கை இடதுபக்கமாக வளைந்து தொட்டுக் கொண்டிருக்கும். கால், கை விரல்கள், மார்புக் காம்புகள் ஆகியன தெளிவாகத் தெரியும் வண்ணம் செதுக்கப்பட்டுள்ளன. இவர் கழுத்தில் பல்வேறு அணிகளைப் பூண்டு கம்பீரமாக வீற்றிருக்கிறார். பாம்புகளை அணியாகவும் உதரபந்தனமாகவும் இவர் பூண்டிருப்பதே தனி அழகு.

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலிலுள்ள இவ்விநாயகப் பெருமான் 'ஹரித்திரா கணபதி'க்குரிய இயல்புகளைப் பெற்றவராவர். 'இப்பெருமான் பத்தர்கட்கு அபயமளிப்பவர்'[10] விநாயகருக்கு இருபுறமும் இரண்டு நாகர் சிலைகள் உள்ளன. இவை பிற்காலத்தியன. ஒரு நாகர் சிலையில் சிவலிங்கமும் இன்னொரு நாகர் சிலையில் சந்தான கிருஷ்ணனும் வடிக்கப்பட்டிருக்கின்றனர். விநாயகர் சந்நிதி முன்னருள்ள மூஞ்சுரும் பலிபீடமும் பிற்காலத்தியன.

இந்த விநாயகர், கருவறையின் அடித்தளத்திலேயே பிரதிட்டை செய்யப் பட்டிருக்கிறார்; பீடம் ஏதும் இல்லை.

## 4.6.1. வள்ளி தெய்வானை உடனாய சுப்பிரமணியர்

வள்ளி, தெய்வானை உடனாய சுப்பிரமணியர் கருவறை, கோயில் திருச்சுற்றில் வடமேற்கு மூலையில் நிறுவப்பட்டிருக் கிறது. மூவரும் தனித்தனிப் பீடத்தில் ஒரே உயரத்தில் நிறுவப் பட்டிருக்கின்றனர். பீடங்கள் அழகுடன் செதுக்கப் பட்டவை. தேன் கூட்டுக்குக் கரண்டம் என்று பெயர். இத்தகு அடுக்கு நான்கு உள்ள கரண்ட மகுடம், சுப்பிரமணியர் அணிந்திருந்தார். சுப்பிரமணியருக்குப் பின்னே மயில் நிற்கின்றது. மயிலின் தோகைகள் அழகுறச் சித்தரிக்கப்பட்டுள்ளன. மயில் பாம்பு ஒன்றைக் கொத்தி வளையம் போலப் பிடித்துக் கொண்டிருக் கிறது. சுப்பிரமணியர் நின்ற கோலமாக உள்ளார்.

சுப்பிரமணியர் கழுத்தில் கிரைவேயஹாரம் என்ற சிறப்பான அணி காணப்படுகிறது. நடுவில் மணிகள் பதிக்கப் பெற்ற தாயும் மேலும் கீழும் இதழ்களோடு கூடியதாயும் இரண்டு விரல் அகலமும், ஆறு விரல் நீளமுள்ள முகப்பை உடையதாகவும் பொன்வடத்தினால் அல்லது கயிற்றால் இழுத்துப் பிணைக்கப் பட்டதாக விளங்கும். காதில் குண்டலங்களும் கைகளில் காப்பும் திகழ்கின்றன.

## 4.6.1.1. ஆகமமும் சுப்பிரமணியரும்

இந்த சுப்பிரமணிய மூர்த்திக்கு நான்கு கைகள். 'சுப்பிர மணியர் பத்மாசனத்திலோ பிறவாறோ மயிலில் வீற்றிருந்தால் அவருக்கு இரண்டு கைகளே இருக்க வேண்டும். மயிலருகே நின்று கொண்டிருந்தால் நான்கு கைகள்; மயிலில் வீற்றிருந்தால் ஆறோ எட்டோ பன்னிரண்டோ கைகள் இருக்கும். துருவ பேரத்திற்கு இருந்த கோலமும் தியான பேரத்திற்கு வாகனத்தில் இருக்கும் கோலமும் உரியன. இரண்டு கைகள் உள்ள வடிவம் சாத்வீகம் என்றும் ஒரு முகமும் நான்கு கைகளுமுள்ள வடிவம் ராஜ்ஜீகம் என்றும் ஒரு முகமும் நான்குக்கு மேற்பட்ட கைகளுள்ள வடிவம் தாமஸிகம் என்றும் கொள்ளுவது மரபு. இங்கு அருளாட்சிபுரியும் சுப்பிரமணியருக்கு நான்கு கைகள். வலது கை அபயமாகவும் இடது கை வரதமாகவும் உருவாக்கப் பட்டிருக்கின்றன. ஏனைய இரு கைகளில், வலக்கையில் சக்தி ஆயுதம் காணப்படுகிறது; இன்னொரு இடது கையில் வஜ்ராயுதமிருக்கிறது.

## 4.6.1.2. சக்தியும் வஜ்ரமும்

சக்தி ஆயுதம் மூன்று சாய் சதுரங்களின் கோடிகள் ஒன்றோடொன்று நெருங்கியிருக்குமாறும் வரிசையாக அமையப் பெற்று அப்பகுதி ஒரு தண்டத்தின் நுனியில் பொருத்தப்பட்ட அமைப்பில் இருக்கும். இவையிரண்டும் பொருந்தும் இடத்தில் ஒரு குண்டலம் அமைந்திருக்கும். அச்சாய் சதுரங்களின் நெற்றி யில் 4,6 அல்லது 8 இதழ்கள் கொண்ட இலைச் சின்னங்கள் பொறிக்கப்பட்டிருக்கும். இதுவே சக்தி ஆயுதம், வேலாயுதம், சக்திவேல் என்று குறிக்கப் பெறுவதாகும். இந்த ஆயுதம் முருகனுக்கே உரிய சிறப்பான கருவியாகும்.

சக்தி ஆயுதத்தின் மேற்பகுதி இச்சா சக்தியையும் நடுப்பகுதி ஞான சக்தியையும் கீழ்ப் பகுதி கிரியா சக்தியையும் குறிக்கின்றன. இச்சை, கிரியை, ஞானம் ஆகிய மூன்றும் முருகப் பெருமானுக்குள் அடக்கம் என்பதை இக்கருவி காட்டுகின்றது. இதனால் இதனையே தனித்து வழிபடு பொருளாகவும் கொள்ளுகின்ற மரபுண்டு. நான்முகன், திருமால், ருத்ரன் ஆகிய மூவரையும் இவை குறிக்கும் என்பர்.

சக்தி ஆயுதத்தைச் சுப்பிரமணியர் மோதிர விரல், சுண்டு விரல் இரண்டையும் இருக்கிறபடி சேர்த்து இரண்டாம் கணு முதல் மடித்து ஆள் காட்டி விரல், பாம்பு விரல் இவ்விரண்டையும் இருக்கிறபடி சேர்த்து நீட்டி ஆள் காட்டி விரல் பாம்பு விரல் நகத்தைப் பார்க்கும்படி கோணலாய்ப் புரட்டிக் கட்டை விரலை இருக்கிறபடி சேர்த்து மடக்குதல்

கர்த்தரீ முக அஸ்தம்) கர்த்தரீ முக அஸ்தத்தில் தாங்கியிருப்பர். இது சுப்பிரமணியரின் மேற்கரத்தில் விளங்குகின்றது. சுப்பிர மணியர் மிகலளிதமாகச் சக்தி ஆயுதத்தை ஏந்தியிருக்கிறார்.

சுப்பிரமணியர் இடது கையில், வஜ்ரம் என்னும் கருவியை ஏந்தியிருக்கின்றார். இரண்டுபுறங்களிலும் சூலமும் இடையில் மூன்று சுற்றுகளும் கொண்டு விளங்கும் ஆயுதம் வஜ்ரம். இதனை இருதலைச் சூலம் என்று சொல்லுவாருமுண்டு. இக்கருவி இறைவனின் அபேத நிலையைக் குறிக்கும். சிவசக்தியின் பிரிக்க முடியாத ஒருமைப்பாட்டையும் வெளிப்படுத்தும்.

## 4.6.1.3. பிரபாவளிப் புதுமை

இந்த சுப்பிரமணியரைச் சுற்றி முட்டை வடிவினதாகப் பிரபாவளி (திருவாசி) அமைக்கப்பட்டிருக்கிறது. பிரபாவளி, சுப்பிரமணியர், மயில் ஆகிய அனைத்தும் ஒரே கல்லில் நுட்பமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றன. மிக உயரமான கனங் குறைந்த கல்லில் இவ்வுருவம் அமைந்துள்ளது. பிரபாவளியை வட்டமாக அமைக்காமல் முட்டை வடிவமாக அமைத்திருப்பது குறிக்கத்தக்கது இதனை 'முட்டை வடிவினதாகத் திருவாசியை அமைத்தல் அது சூரியன் தனது ஒளி, ஈர்ப்பு ஆகிய ஆற்றல் நிரம்பிய வட்ட வடிவமான தனது எல்லைக்குள் ஏனைய கோள் களையும், அகப்படுத்தி அவற்றை இயக்குவதைப் போல, முழு முதல் இறைவன் தனது அருள் சக்தி எல்லைக்குள் உலக உயிர் களை ஆட்படுத்தித் தனது ஐந்தொழில்களைச் செய்கின்றான் என்ற கருத்தை உணர்த்தும். 'இந்த அமைப்பின் மூலம் சுப்பிர மணியருக்குத் தனிச் சிறப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

பிரபாவளி முழுமையும் பல்வேறு இலைக் கொடிகள் வரையப் பட்டுள்ளன. அதன் மையத்தில் நாசித் தலை காணப்படுகிறது.

சுப்பிரமணியர் உருண்டையான முகத்துடனும் கூர்த்த விழிகளுடனும் எடுப்பான மூக்குடனும் மெல்லிய புன்னகை தவழக் காட்சி தருகின்றார். இரண்டு அல்லது நான்கு கைகளுடைய சுப்பிரமணியரை வழிபடும் அடியவர்களுக்குச் சித்தி கிட்டும்.[11]

## 4.6.2. வள்ளியும் தெய்வானையும்

சுப்பிரமணியருக்கு வலப்புறம் வள்ளி கருமை நிறத்தில் நின்ற கோலத்தில் நிற்கின்றனள். வள்ளி இடது கையில் நீலோத்பல மலரை ஏந்தியவாறு காட்சி தருகிறாள்; வலது கை கடிய வலம்பிதமாகும். இவள் கால்களையும் கைகளையும் ஒருபாற் கோடாமல் நேருக்கு நேராக வைத்துச் சமபாதஸ்தானகக் கோலத்தில் அமைக்கப்பட்டிருக்கிறாள். தெய்வானை சிலையைக்

காட்டிலும் வள்ளியின் வடிவம் சற்று பருமனாகச் செதுக்கப் பட்டிருக்கிறது. இவள் கருமை நிறமாதலின் இவள் உருவத்தை அமைக்கக் கருமையான கல் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறது.

சுப்பிரமணியருக்கு இடப் புறம் தெய்வானை சிவப்பு நிறத்தில் நின்ற கோலத்தில் ஆபங்கமாக (உடலின் ஒடிவு வளைவுகளுடன்) நின்ற கோலத்தில் காட்சியளிக்கின்றனள். வள்ளியை விடத் தெய்வானை சற்று மெலிந்த வடிவம். இவள் இடது கையில் நீலோற்பல மலரை ஏந்திய வண்ணமிருக்கின்றாள். இன்னொரு கை அவளுக்கு அருகே உள்ள ஒன்றைப் பற்றிய வண்ணம் தொங்குகிறது. மார்பில் கச்சு இல்லை.[12] இருவரும் கரண்ட மகுடம் சூடியுள்ளனர். காதுகளிலும் கைகளிலும் கால்களிலும் அணிகலன்கள் காணப்படுகின்றன.

இவ்வாறு கலையழகுடன் மிகச் சிறப்பாக வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் விளங்குகின்றனர். இத்தகைய மூர்த்தியைப் பற்றிச் சிற்பரத்தினம் கூறவில்லை; தனியேயுள்ள சுப்பிர மணியரைத்தானே சொல்லுகின்றது.[13] சுப்பிரமணிய பராக்கிரமம் என்ற நூல் வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் திருவுருவங்கள் பற்றிப் பேசுகின்றது. வள்ளி தெய்வானையோடு சுப்பிரமணியர் ஒருங்கு மயில் மீது அமர்ந்த கோலம் நடனநாத மூர்த்தி ஆகும்.[14] அந்நூலாசிரியர் திருச்செந்தூர்ப் புராணத்தைக் கொண்டு இவ்வடிவத்தைக் கூறுகிறார். வள்ளி தெய்வானை யோடு சுப்பிரமணியர் ஆசனத்தில் வீற்றிருப்பது காமராச மூர்த்தி ஆவார். இங்கு மயிலுக்கு இடமில்லை. இவ்வடிவத்தைத் திருச்செந்தூர்ப் புராணம்.

> "கொண்டல்தாழ் மகேந்திரத்தில் குருக்கத்தித்தென் கீழ்ப்பாங்கர்
> அண்டுதற்கரிய கூர்மச் சிலையிடை அணிகொள் சோதி
> மண்டபத்திரண்டு மாதர் ஊடியும் புணர்த்தும் வானோர் கண்டடி
> வணங்கக் காமக்கடவுள் என்றொரு பேர் பெற்றான்"[15]

என்றுரைக்கின்றது. வள்ளி தெய்வானை உடனாய சுப்பிர மணியர், வீரவாகு தேவர்க்கு எவ்விடத்தும் தாம் விபுத்துவமுடை யராய் விளங்குங் கோலங்காட்டலால், விபுத்துவ மூர்த்தி யாயினர்.[16] இவரைச் சர்வ விபுத்துவமூர்த்தி என்பர். இந்த வடிவங் களில் எல்லாம் வள்ளி, தெய்வானை, சுப்பிரமணியர் உருவங்கள் இடம்பெற்றிருக்கின்றன. நடனநாத மூர்த்தியில் மூவரும் ஒருங்கு மயிலில் வீற்றிருக்கின்றனர். இங்குச் சுப்பிரமணியருக்குப் பின்னே மயில் நிற்கின்றது. வள்ளியும் தெய்வானையும் தனித்தனியே நிற்கின்றனர்; காமாசாரமூர்த்தியிலும் சர்வ விபுத்துவமூர்த்தியி லும் மூவரும் ஒருங்கு வீற்றிருக்கின்றனர். மயில் இடம் பெற வில்லை. எனவே திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில்

வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் இப்பெயருக்குரியவ ராயே காட்சி நல்குகின்றார்.

## 4.7. சண்டேசுவரர்

சைவ வழிபாட்டில் விநாயகருக்கு உரிய முக்கியத்துவம் சண்டேசுவரருக்குத் தரப் பெறும். கிரியைகள் தொடங்கும் பொழுது விநாயகரை வணங்குவர்; சிவபூசை முடிவில் சண்டேசுவரரை வழிபடுவர். இவர் சிவபெருமானின் கரு வறையை அடுத்து மிகவும் நெருங்கி இடம்பெற்றுள்ள சிறுதனிக் கோயிலொன்றில் வீற்றிருப்பார். பீடத்தில் அமர்ந்த கோலமாக விளங்கும் இவரின் வலக்கால் கீழே தொடங்கும்; இடது காலை மடக்கிப் பீடத்தின் மேல் வைத்திருப்பார். உடலை எப்பக்கமும் சாய்வின்றி நேராக நிமிர்த்திக் கைகளைச் சமச் சீருடையாகக் கோலித்திருப்பர். இதற்குச் 'சுகாசனம்' என்று பெயர். வலது கையில் மழுவாயுதம் விளங்கும். இடது கையை மடித்துத் தொடை மீது வைத்திருப்பார்.

சண்டிகேசுவரரின் தலையின் உச்சியிலிருந்து அரை முகம் அளவில் உயர்ந்து இரு பக்கங்களிலும் விரிந்து தோள் மட்டம் வரை சடை தொங்கியிருக்கும். தொங்குகின்ற சடைகளைக் கட்டியமைத்து அழகுபடுத்தியிருக்கின்றனர். காதுகளில் கனத்த குண்டலங்கள் காணப்படுகின்றன. கழுத்தில் பல்வேறு அணிகலன்களும் மார்பில் பூணூலும் கைகளில் புஜங்கக் காப்பும் பிறவும் அமைந்து அழகு தருகின்றன. மழுவாயுதத்தின் மேற்பகுதி அவருடைய தோள் மட்டத்திலும் நுனி அவர் தலை உயரத்துக்குக் குறைவாகவும் செதுக்கப்பட்டிருக்கிறது.

இந்தச் சண்டிகேசுவரர் புன்னகை தவழும் முகத்துடன் மிக்க வனப்புடன் விளங்குகிறார். திருமாக் கோயிலின் சிறந்த சிற்பங்களில் இவர் ஒருவர் என்பதில் ஐயமில்லை. இவரைப் போல அமைந்த சண்டிகேசுவரர் ஒருவரைக் கிணற்றிலிருந்து எடுத்திருக்கின்றனர். அவரின் காலடியில் ஏதோ ஒருவரும் செதுக்கப்பட்டிருக்கிறது. இச்சண்டிகேசுவரரின் தலைமுடி அமைதி, வழிபாட்டிலுள்ள மூர்த்தியின் அமைப்பிலிருந்து வேறுபட்டது.

## 4.8. கருவறைத் தேவகோட்டத் தெய்வங்கள்

### 4.8.1. தெட்சிணாமூர்த்தி

கருவறைத் தேவகோட்டங்களில் மூன்று பக்கத்திற்கும் மூன்று தெய்வங்கள் நிறுவப்பட்டிருக்கின்றன. தெற்குப்பக்கமுள்ள கோட்டத்திலிருந்து தனி மண்டபம் அமைத்து மேடை ஒன்றின்

மேல் தட்சிணாமூர்த்தி விளங்குகின்றார். தட்சிணாமூர்த்தி ஆலமர் செல்வன் என்பதற்குத் தக்கவாறு இவருக்குப் பின்னே ஆலமரமில்லை. இவர் நான்கு கைகளுடையவர். கீழ் வலக்கை அபயமாகவும் கீழ் இடக்கை வரதமாகவும் விளங்குகின்றன. மேல் வலக்கை அட்சமாலை ஏந்தியிருக்க மேல் இடக்கையில் பாம்பைத் தாங்கி நிற்கும். உடம்பு வளைவின்றி நேரே நிமிர்ந்திருப்பது நோக்கத்தக்கது. சடாபாரம், தலையின் உச்சியில், நடுவிலிருந்து இரண்டு பக்கங்களிலும் தொங்கும். அவை கட்டப்பட்டுக் கவினுற அமைக்கப்பட்டிருக்கின்றன. தலையின் உச்சியில் பூரிமத்தைப் பொருத்திச் சிற்பி இவ்வடிவை வனப்புற வடிவமைத்துள்ளான். இது தட்சிணாமூர்த்திக்கே உரிய தலை அலங்காரம்.

தட்சிணாமூர்த்தி அமர்ந்த நிலையில் ஒரு காலைப் பிகுவாகத் தொங்க விட்டு ஊன்றி, மற்றொரு காலை அதன் மீது விறைப்பாகப் படுக்கக் கிடத்தி நீட்டி உடலைச் சமநிலையில் கொண்டு விரைப்பாக நிமிர்த்தி ராஜநோக்குடன் விளங்குகிறார். இவ்வாறு அமர்ந்திருக்கும் கோலத்துக்கு 'வீராசனம்' என்று பெயர். கீழே தொங்கும் வலது கால் முயலகனை (அபஸ்மார புருஷனை) மிதித்துக் கொண்டிருக்கும்.

இத்தட்சிணாமூர்த்தி மலைமீது வீற்றிருப்பதுபோலச் செதுக்கப்பட்டிருக்கிறார். மலைச் சிகரங்கள் பல தெரிகின்றன. அதன் மீது தட்சிணாமூர்த்தி வீற்றிருக்கின்றார். வியாக்கியான தட்சிணாமூர்த்திக்கு முன்னர் சனகாதி முனிவர் நால்வரைத் தனியே நிறுவுவர். திருக்கொடுங்குன்றத்தில் (பிரான்மலை) தட்சிணாமூர்த்தியும் நால்வரும் மிகப் பெரிய வடிவமாகச் செதுக்கப்பட்டிருக்கின்றனர்.[17] இவை மிக அழகான வடிவங்கள். திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் தட்சிணாமூர்த்தி, மலை, நான்கு முனிவர்கள், முயலகன் ஆகிய உருவங்களனைத்தும் ஒரே கல்லில் உருவாக்கப்பட்டிருக்கின்றன.

சனகாதிமுனிவர்களைத் தட்சிணாமூர்த்தி கால்களுக்கிடையே அமைத்த வடிவம், ஓர் அரிய வடிவமாகும். தட்சிணாமூர்த்தியின் அருள் நிறைந்த திருமுகம் கண்கவரும் வனப்புடையது. தெட்சிணாமூர்த்தி கழுத்தில் பல்வேறு அணிகலன்கள் அழகு தருகின்றன, காதில் குண்டலங்களும் மார்பில் பூணூலும் உள்ளன.

தட்சிணாமூர்த்தி மண்டபத்தை பிற்காலத்தில் சுவர் வைத்துத் தடுத்துக் கருவறை போலாக்கியுள்ளனர். இங்கு இரண்டு காசி லிங்கங்கள் வைக்கப் பட்டிருக்கின்றன. லிங்கம் குக்குடாண்ட (கோழி முட்டை) வடிவினது; ஆவுடை வட்ட வடிவினது. அருகில் விசாலாட்சி அம்மை இரண்டு கைகளுடன் உள்ளார். இவளுடைய வலக்கையில் நீலோற்பல மலரும், இடக்கை கடிய வலம்பிதாகவும் காணப்படுகின்றன. கரண்ட மகுடத்துடன்

விளங்கும் அம்மை சிறிய வடிவினள். இங்குக் காசி மடத்துத் தம்பிரான்கள் இருந்துள்ளனர். அவர்கள் காசிக்குப் போய் வந்த போது கொண்டு வந்த சிற்பங்களே இவையாகும்.

## 4.8.2. அனல் வடிவான அண்ணாமலையார்

கருவறையில் மேற்குப் பக்கத் தேவகோட்டத்தில், அண்ணா மலையார் என்ற லிங்கோத்பவர் அடியார்கென எழுந்தருளியிருக் கின்றார். இப்பெருமானின் மிகப் பெரிய அழகிய வடிவங்களைத் திருமெய்யம் சத்தியகிரீசுவரர் திருக்கோயிலிலும்[18] பிள்ளையார் பட்டிக் குடைவரைக் கோயிலிலும் காணமுடிகின்றது.[19] திருப் பாதாளேச்சுவரர் திருக்கோயில் அண்ணாமலையார் கவினார்ந்த கலைமலிந்த அரிய திருவுருவம் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி. அண்ணாமலையார் என்ற லிங்கோத்பவர் எல்லாச் சிவன் கோயில்களிலும் நிறுவப்பட வேண்டிய மிக முக்கியமான திருவுருவம். லிங்கத்தை நான்கு பாகம் பிரித்து மேலே ஒரு பங்கும் கீழே ஒரு பங்கும் பிரித்து நடுவில் நெருப்புச் சுடர் போல லிங்கத்தின் இரண்டு பக்கத்தில் கீறி அதன் நடுவில் சிவபெரு மான் உருவத்தை உருவாக்குவர்.

சிவபெருமான் திருமுடியும் திருவடியும் இச்சிற்பத்தில் வடிக்கப்பட்டிருக்காது. இந்த லிங்கத்தின் வலதுபுறம் மேலே பிரம்மா அன்னத்தின் மீதிருந்தவாறு மேல்நோக்கிப் போவது போலச் செதுக்கப்பட்டிருக்கிறார். அவர் வலது கையை மேலே உயர்த்தியிருப்பார். அது மேலேமேலே செல்லும் குறிப்பைக் காட்டுவதாகும். பிரம்மாவை அன்னப் பறவையுடன் அண்ணா மலையார் வடிவில் அமைத்திருப்பது வேறெங்கும் காண முடியாத அமைப்பாகும்.[20] பிரம்மா கரண்ட மகுடம் புனைந்து காதுகளில் குண்டலங்கள் அணிந்துள்ளான்.

கீழே இடதுபக்கத்தில், கீழே நிலத்தை அகழ்ந்து தோண்டும் பாவனையில் வராகமூர்த்தி செதுக்கப்பட்டிருக்கிறார். இவர் வராக வடிவினராகவே அணிகலன்களுடன் உருவாக்கப்பட் டிருக்கிறார். பிரம்மாவை மனித வடிவில் செதுக்கிய சிற்பி, திருமாலை மட்டும் விலங்கு வடிவிலேயே செதுக்கியிருக் கின்றான். இதற்கு என்ன காரணம் என்பது புலனாகவில்லை.

அண்ணாமலையாருக்கு நான்கு கைகள்; முன் வலது கை அபயமாக இருக்க முன் இடது கையைக் கீழ்நோக்கி நேராக நீட்டி, கைத்தலத்தையும் விரல்களையும் தொடை மீது பொருத்தி மென்மையாக ஊன்றி ஊருஹஸ்தமாக விளங்க அமையும். இது படிமத்திற்கு ஒரு கம்பீரமான தோற்றத்தைத் தரும். ஏனைய கைகளில் அண்ணாமலையார் மானையும் மழுவையும் ஏந்தி யிருக்கிறார். கழுத்தில் பல்வேறு அணிகலன்களும் பூணூலும்

*வலக் காதில் குழையும் இடக் காதில் குண்டலமும் காணப் படுகின்றன.*

*தலையில் கிரீட மகுடம் அழகு தருகிறது. வட்ட வடிவான முகம்; எடுப்பான கூரிய நாசி; அழகிய கண்கள். அண்ணா மலையாருக்குப் பின்னே மலைபோலச் சில படிவங்களின் தோற்றம் தெரிகின்றன. அவையாவை என்பது புலனாகவில்லை. 3 அல்லது 4 விரல் அகலமுள்ள அரைப்பட்டிகை இடுப்பில் கட்டப்பட்டிருக்கிறது. இதில் பூ, இலைக்கருக்கு வேலைப்பாடுகள் செய்யப்பட்டிருக்கும். தொடை வரையில் வருமாறு இவர் ஆடை உடுத்தியிருப்பர். இக்கோயிலுக்குப் பெருமை சேர்க்கும் அழகிய திருவுருவம் லிங்கோத்பவர் என்பது உறுதி.*

## 4.8.3. நான்முகன்

*கருவறையின் வடதிசைக் கோட்டத்தில் நான்முகன் உருவம் அமைந்துள்ளது.*

*சதுரமான உயர்ந்த இருக்கையின் மேல் நான்கு கைகளுடன் நேராக நின்ற கோலத்தில் இவர் உள்ளார். அண்ணாமலை யாரின் மேற்பகுதியில் காணப்படும் நான்முகனுக்கு ஒரே முகம்; இங்கு மூன்று முகமே காணப்படுகிறது. நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் நான்முகனை நான்கு முகமுடையவனாகவே பத்தொன்பதாம் நூற்றாண்டில் சிற்பங்கள் அமைத்தனர். இதனை.*

> "இங்கு (வயிரவன் கோயில்) பிரமனின் நான்கு தலைகளையும் உயர்ந்த சடை மகுடங்கள் அலங்கரிக்கின்றன. பொதுவாகப் பாண்டியர், விஜயநகரர், நாயக்கர் கால நான்முகனின் சிற்பங்கள் மூன்று தலைகளுடன் அமைந்திருக்க வயிரவன் கோயில் நான்முகன் நான்கு முகங்களுடன் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது"[21]

*என்று கோயிற்கலை ஆய்வாளர் உரைப்பர். சூரக்குடி, பிள்ளை யார்பட்டித் திருக்கோயிலிலும் நான்கு முகங்களுடனேயே பிரம்மா காணப்படுகிறார்.*[22]

*நான்முகனாகிய பிரம்மாவுக்கு நான்கு கைகள். முன் வலக்கையும் இடக்கையும் அபயமும் வரதமுமாகவும் மேலிரு கரங்கள் அக்க மாலையும் கெண்டியும் கத்திரி முத்திரையாக வும் திகழ்கின்றன. தலையில் கிரீட மகுடம் உள்ளது. காதுகளில் உருத்திராக்கமும் கழுத்தில் பொன் சரடும் சவடியும் மார்பில் பூணூலும் உண்டு. காலில் காப்பு இருக்கிறது. ஆடை கணுக்கால் வரை அழகுறப் புனையப்பட்டுள்ள பாங்கு சீரியது. ஆடை நழுவாமல் மேலே குறங்குச்செறியும் திகழும். நான்முகன் திருவுரு வம் ஒரே கல்லில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டிருக்கிறது.*

## 4.9. சப்தகன்னியர்

திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் சப்த கன்னியர் வரிசையாக ஒரே கல்லில் உருவாக்கப்பட்டுள்ளனர். சுகாசன நிலையில் இவர்கள் இருந்த கோலத்தில் செதுக்கப் பட்டிருக்கின்றனர். தனிக் கருவறை இவர்களுக்கு இல்லை; மேற்கு நோக்கிய வண்ணம் இச்சிலை வயிரவர் சந்நிதியை அடுத்த சுவர் ஓரமாக வைக்கப்பட்டு வழிபாட்டிலுள்ளது.

## 4.10. சூரியனும் சந்திரனும்

சூரியனும் சந்திரனும் அடுத்தடுத்து, சப்தகன்னியர் வரிசையில் வைக்கப் பட்டிருக்கின்றனர். இருவரும் நின்ற கோலத்திலேயே உருவாக்கப்பட்டுள்ளனர். இருவரும் பல்வேறு அணிகலன் களுடன் ஒரு கை அபயமாகவும் இன்னொரு கை வரதமாகவும் காட்சி தருகின்றனர். சூரியன் தலையைச் சுற்றி ஒளி வட்டம் அமைக்கப்பட்டிருக்கிறது. அழகிய வடிவம்.

சந்திரன் இரண்டு கைகளில் அல்லி மலரைத் தாங்கியுள்ளான். இவன் தலையைச் சுற்றி ஒளி வட்டம் காணப்படுகிறது.

## 4.11. சனி பகவான்

இங்குள்ள சனீசுவரன், பத்தொன்பதாம் நூற்றாண்டில், இராங்கியம் நகரத்தார் ஒருவரால் இங்கு எழுந்தருளிச் செய்யப் பெற்றது. இங்கு ஒன்பது நவக்கிரகங்களுக்கு என்று தனியே சந்நிதி இல்லை. பீடத்திலுள்ள காகத்தின் மீது சனீசுவரன் அமர்ந்த கோலத்தில் இடக்காலைக் கீழே ஊன்றியும் வலக் காலைக் காகத்தின் மீது வைத்த வண்ணமுமிருக்கின்றார். பல்வேறு அணி கலன்கள் பூண்ட இவருக்கு நான்கு கைகள். வலது கைகளில் பாணமும் சூலமும் இடது கைகளில் வில்லும் வரதமுத்திரையும் அமைந்திருக்கின்றன.

## 4.12. கைலாசநந்தியும் அதிகார நந்தியும்

சிவபெருமான் கருவறைக்கு எதிரே ஒரு நந்தியும் கோபுர வாயிலுக்கு அருகே ஒரு நந்தியும் பிரதிஷ்டை செய்யப்பட் டுள்ளன. அருத்த மண்டபத்தின் முன்னுள்ள கைலாச நந்தி சிறியது; அதிகார நந்தி பெரியது. நந்தி, நீண்ட சதுர பீடத்தின் மேல் திருப்பாதாளேச்சுவரரை நோக்கிய வண்ணம் கால்களை மடித்துப் படுத்துள்ளது. மடக்கிய கால்கள் இரண்டும் நன்கு தெரிகின்றன. நந்தியின் கொம்புகள் கட்டையானவை; அவற்றின் மீது கொப்பிகளிடப்பட்டிருக்கின்றன. நெற்றியில் சுட்டி உள்ளது. உருண்ட அழகான கண்கள்; நீளமற்ற காதுகள்; சிற்றத்தைக்

காட்டக் கூடிய கட்டையான முகம்; கழுத்தில் பட்டையும் மணிச் சலங்கையும் அணி செய்கின்றன; முதுகில் அழகு செய்யப் பெற்ற விரிப்பும் காணப்படுகின்றது.

## 4.13. உலோகத் திருமேனிகள்

ஆகம சிற்ப மரபுகளைத் தழுவியும் உலகியல் நடைமுறை களை ஒட்டியும் சிறந்த சிற்பங்கள் இங்குத் திகழ்கின்றன. திருக் கோயிலில் தெய்வத் திருவுருவங்களை நகர்வலமாகக் கொண்டு வருவதற்குச் செப்புத் திருமேனிகள் வேண்டும். இக்கோயிலிலுள்ள செப்புத் திருமேனிகள் அனைத்தும் மிகப் பழமையானவை. இவண் பதின்மூன்று செப்புத் திருமேனிகள் உள்ளன. அவை யாவன:

1. விநாயகர்
2. அஸ்திரதேவர்
3. திருஞானசம்பந்தர்
4. சுந்தரர்
5. மாணிக்கவாசகர்
6. வயிரவர்
7. உமாமகேசுவரர் (பிரதோசநாயகர்)
8. நடராஜர்-சிவகாமி
9. நடராஜர்- சிவகாமி (கிணற்றிலிருந்து எடுத்தது)

### 4.13.1.விநாயகரும் அஸ்திரதேவரும்:

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் விநாயகர் தொடர் பான விழா எதுவும் நடைபெறவில்லை. இங்கு விநாயகரின் செப்புத் திருமேனி நின்ற கோலத்தில் நான்கு கைகளுடன் உள்ளது. மேல் வலக்கை அங்குசத்தையும் இடக்கை பாசத்தையும் கீழ் வலக்கை ஒடிந்த கொம்பையும் கீழ் இடக்கை மோதக்தையும் கொண்டுள்ளது. இவருடைய துதிக்கை இடம்புரியாக வளைந்து மோதகத்தைத் தொட்டு நிற்கிறது. தலையில் கரண்ட மகுடம், பல்வேறு அணிகலன்கள் பெற்று விநாயகர் அழகுறத் திகழ்கிறார்.

இங்கு விநாயகர் சதுர்த்தி விழா நடந்தமையாலேயே விநாயகர் உற்சவர் உள்ளது. மேலும் பஞ்சமூர்த்தி உலவுமிருந்திருக்க வேண்டும்.

திருக்கோயிலில் தீர்த்தவாரிக்கு உரிய தேவர், அஸ்திர தேவர். சதுரமான உலோகத் தகட்டின் மீது செங்குத்தாக வட்டமான

துணைச் செங்குத்தாக நிறுத்தியிருப்பர். அதன் மேல் முத்தலைச் சூலத்தை அமைத்திருப்பர். இதுவே அஸ்திரதேவராவார்.

### 4.13.2.1. ஞான சம்பந்தர்

இப்பெருமான் சதுரமான பீடத்தின் மீது தாமரை இருக்கையில் இடக்காலை ஊன்றி, வலக் காலைத் தூக்கி வைத்து அழகாக ஆடும் நிலையில் வார்க்கப்பட்டுள்ளார். வலக்கை கடக முத்திரை காட்டுகிறது.

கேசத்தை வாரி மகுடம் போலத் தூக்கி நிறுத்தி, மேற்பகுதியில் சுருண்ட கேசங்கள் மகுடத்தைச் சுற்றிலும் எழிலூட்டுகின்றன. நெற்றியைச் சுற்றிலும் சுருண்ட கேசங்கள் வனப்பூட்டுகின்றன. காதுகளில் குழையும், தோளில் மாலையும், அரும்புச்சரம், மணியாரம், முதலியனவும், தோள் வளை, கடகம், கைவளை, விரல்களில் மோதிரம், அரையைச் சுற்றிலும் முத்துக்கள் கோர்த்த பொன்ஞாண், காலில் தண்டை, சதங்கை, பாதசரம் முதலியவும் அணி செய்கின்றன. இவர் நர்த்தன ஞானசம்பந்தர்.

### 4.13.2.2. சுந்தரர்

சுந்தரர் சதுரமான பீடத்தின் மீது தாமரை இருக்கையில் வலக்காலை ஊன்றி, இடக்காலைச் சிறிது மடக்கி முன் வைத்து இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் விளங்குகின்றார். வலக்கை முன் நோக்கி நீண்டு முத்திரை காட்டுகிறது. இடக்கை பரவை நாச்சியார் தோளில் அமையும் வண்ணம் உள்ளது. தலைக்கோலம் கொண்டையிட்டு அழகுடன் விளங்குகிறது. ஆடையும், அணியும் அரசகுமாரனைப் போன்று தோற்றமளிக்கிறது.,

வாகுமாலை, சேயூரம், காப்பு, கண்டிகை, சரப்பளி, முப்புரி நூல், இடைக்கச்சை, பாதசரம் ஆகிய அணிகளும், ஆடை அமைப்பும், படிமத்தை அழகு செய்கின்றன.

### 4.13.2.3. மாணிக்கவாசகர்

பாண்டிய நாட்டு அமைச்சரான இவர் தாமரை இருக்கை மீது இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் உருவாக்கப் பட்டிருக்கிறார். வலக்கை சின் முத்திரையுடனும், இடக்கை சுவடி ஏந்தியும் உள்ளன. தலை, கழுத்து, தோல், முன் கைகளில் அக்கமாலை அணி செய்கிறது. மார்பில் பூணூலும், இடையில் கௌபீனமும் காணப்படுகின்றன. இவர் இன்றும் திருவிழாக் காலங்களில் எழுந்தருளும் மூர்த்தியாவார்.

## 4.13.2.4. வயிரவர்

வயிரவர் படிமம் பீடத்தின் மீது நான்கு திருக் கைகளுடன் நேராக நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. மேற்கைகள் இரண்டும் உடுக்கையையும், பாசத்தையும் ஏந்தி நிற்க, கீழ்க் கைகள் சூலத்தையும், கபாலத்தையும் பற்றியுள்ளன. இவ்வடிவம் சுவாலை மகுடம், பத்ர குண்டலம், அரவத்தால் ஆன அரை ஞாண் சதங்கை ஆகிய அணிகலன்களைக் கொண்டு திகம்பரக் கோலத்தில் காணப்படுகின்றது.

## 4.13.2.5. உமாமகேசுவரர் (பிரதோஷநாயகர்)

செவ்வக பீடத்தின் மீதுள்ள இரு தாமரை இருக்கையில் சிவனும், உமையும் நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளனர். சிவன் மேற்கையில் மழுவும் மானும் ஏந்தி, கீழ்க் கைகளில் அபய, வரதம் அளிக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளனர். உமையின் வலக்கை நீலோற்பலம் பற்றியும் இடக்கை தாழ் கையாகவும் அமைந்துள்ளன. சிவன், உமை இருவருடைய முடியையும் சடா மகுடமும், கேசபந்தமும் அலங்கரிக்கின்றன.

## 4.13.2.5.1. சிவபெருமான்

சுகாசனத்தில் அமர்ந்துள்ளார். நான்கு திருக் கைகளில் மேற்கைகளில் மழுவும், மானும் நிற்க கீழ்க் கைகள் இரண்டும் அபய முத்திரையும், சிம்மகரண முத்திரையும் அமைந்து விளங்குகின்றன. நீண்ட சடை மகுடம். மகரக் குழை, கண்டிகை, முத்தாரம், சரப்பளி, அரும்புச் சரம், கேயூரம், காப்பு, பூணூல், இடைக் கச்சை, கழல், பாதசரம் ஆகியவை அழகாக அமைந்துள்ளன.

## 4.13.2.5.2. உமை

அம்மை தாமரை இருக்கையில் ஒரு காலை மடித்து மறு காலைத் தொங்க விட்டு இருந்த கோலத்தில் இரண்டு கைகளுடன் தோற்றமளிக்கிறாள். வலக்கை நீலோற்பலத்தைப் பிடித்தும், இடக்கை வரதமுத்திரை காட்டியும், அருள் பாலிக்கும் முகத் தோடு பாதரசம், சரடு, சரப்பளி, சூண்டிகை, காப்பு மகரக்குழை, கரண்ட மகுடம் ஆகிய அணிகள் அணிந்து அழகுடன் விளங்குகின்றது.

## 4.13.2.6.1. நடராசர் திருவுருவ அமைதி

'ஆடல் அரசனான நடராசர் சிதாகாசத்தில் லயசிவம் என்னும், மந்திரமூர்த்தியாய் விளங்கும்போது சதாசிவம் என்றும்,

அதிகார மூர்த்தியாய்க் கோயில்களில் விளங்கும்போது சபாபதி என்றும் அழைக்கப்படுகிறார். பரம்பொருளுக்கு ஐந்து ஆற்றல்கள் உண்டு. அவை படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவாகும். நடராசர் இந்த ஐந்து ஆற்றல்களுக்கும், ஐந்து நடன உருவங்களையும் பொருத்திக் காட்டுவர். ஆக்கல் தொழிலைக் குறிக்கும் நடராச தாண்டவம் காளிகா தாண்டவம்; காத்தல் தொழில் என்பதன் உருவகமே கௌரிதாண்டவம்; அழித்தல் தாண்டவமே சம்ஹார தாண்டவம்; மறைத்தலுக்குத் திரிபுரதாண்டவம்; அருளைக் குறிக்கும் நடராஜ தாண்டவம் ஊர்த்துவ தாண்டவம் ஆகும். கோயில்களில் பெரும்பான்மையும் ஆனந்தத் தாண்டவ நடராச உருவமே இருக்கும். இந்த ஆனந்தத் தாண்டவத்தில் ஐந்து தொழில்களும் ஒருசேர இணைத்து உருவகப் படுத்தப்பட்டுள்ளன.

இத்திருக்கோயிலில் நடராசர் சிற்பம் சந்தியா தாண்டவத்தில் இடது திருவடி தூக்கி நடனம் ஆடும் நிலையில் வலது திருவடி கீழே கிடக்கும் முயலகனை மிதித்துக் கொண்டும் இருக்கின்றது. விரிந்த சடையுடன், நான்கு கைகளுடன் காணப்படுகின்றது. மேல் வலக்கையில் உடுக்கையும், கீழ் வலக்கையில் அபய முத்திரை காட்டியும், மேல் இடக்கையில் எரிகின்ற நெருப்பும், கீழ் இடக்கை முன்னோக்கி மார்புக்குக் குறுக்காக நீட்டிய நிலையிலும் காணப்படுகின்றன,

மார்பில் பூணூல், கழுத்தணிகள் இவை அழகு செய்கின்றன. மகர வட்டக் குழைகள் செவிகளை அலங்கரிக்கின்றன. கைகளில் தோள் வளையும், முழங்கையில் கடகமும், முன் கையில் காப்பும், விரல்களில் மோதிரமும் இடையில் வேலைப்பாடு மிக்க ஆடையும் வனப்பூட்டுகின்றன. பாதங்களில் சதங்கையும், தண்டையும் அலங்கரிக்கின்றன. ஆடும் பெருமாளின் முகம் பெருமிதமாக நிமிர்ந்து தோற்றமளிக்கிறது. அப்பெருமானின் திருவடிக் கீழே விழுந்து கிடக்கும் முயலகன் ஆடும் அவதார்த்தைப் பற்றி, வலக்கைச் சுட்டுவிரலால் முத்திரையிட்டுக் காட்டுகிறான். அவன் தலையிலுள்ள வட்டமான சடை முடியும், காதில் உள்ள வட்ட மான குழையும், இடையில் உள்ள ஆடையும், இங்கு நன்றாக வடிக்கப்பட்டுள்ளன. முதுகில் கால் வைத்து ஆடும் பெருமானின் ஆடலை முழுதும் காணவேண்டித் தன் கழுத்தைச் சாய்த்து முகத்தை மேல் நோக்கித் திருப்பிக் காணும் காட்சி அற்புதமானது. இந்த நடராசர் சிற்பத்திற்குப் பிரபாவளி உள்ளது.

கிணற்றிலிருந்து பெறப்பட்ட நடராச சிற்பத்திற்குப் பிரபாவளி இல்லை. மேற்கண்ட வனப்போடு நடனமாடும் நிலையில் நான்கு கைகளுடன் முயலகனை மிதித்தவாறு காணப்படுகிறது. இவ ருடைய மகுடம் வேறு வகையினது. இது சோழர் காலத்தியது.

## 4.13.2.6.2. அம்மை

*சிவகாமி அம்மன் இடையை வலப்புறமாக வளைத்து, இடது காலை மடித்து முன் நிறுத்தித் திரிபங்கத்தில் தாமரை இருக்கை மீது நின்ற கோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. தலையில் சுரண்ட மகுடமும், செவிகளில் மகரக் குழையும், கழுத்தை அலங்கரிக்கும் கண்டிகை, மணியாரம், சரப்பளி முதலியனவும் மேற்கையில் வளையும், விரல்களில் மோதிரமும், இடையில் மேகலையும், வேலைப்பாடுமிக்க இடை ஆடைக் கட்டும் காலில் தண்டையும், பாதங்களில் சரமும் மிகப் பொருத்தமாக வடிக்கப் பெற்றுள்ளன.*

*மற்றொரு சிவகாமி அம்மையும் இந்த அமைப்புடனே அமைந்துள்ளது.*

## இவ்வியலில் இயம்பிய கருத்துகள்

1. *திருக்கோயிலமைப்பதற்குப் பல்வேறு வகையான நியதிகளுள்ளன. கோயிலமைப்புக்குத் தக்கவாறு திருஉருவங்களின் அமைப்பு மாறும்.*
2. *படிமங்கள் மூன்று வகை; மூலப் படிமத்திற்குத் தக்கவாறுதான் பரிவார படிமங்களும் உற்சவ படிமங்களும் செய்யப் பெறும். திருப்பாதாளேச்சுவரர் நின்ற கோலத்தில் காட்சி தருகின்றார். இவர் பெயர் 'திருப்பாதாளேச்சுவரர்' என்பதாகும்.*
3. *'திருப்பாதாளேச்சுவரர்' என்ற பெயர் திருஞானசம்பந்தர் பாடிய பாம்புணி (பாமணி)த்தலத்திறைவன் பெயர். அந்த இறைவனை நினைக்கும் வண்ணம் இப்பெயர் இருக்கின்றது.*
4. *இங்குள்ள அம்மையின் வளைந்த கோலம் தனியழகுடையது. சாத்வீகப்பண்பைக் காட்டக் கூடியது. இவ்வம்மைக்கு இரண்டே கைகள்.*
5. *இக்கோயிலின் வயிரவமூர்த்திக்கு நான்கு கைகள். இவர் 'கபால வைரவர்' என்பவர் வெண்கலத்தாலான முத்தலைச் சூலம் ஒன்று இருவருடன் வைக்கப்பட்டிருக்கின்றது.*
6. *விநாயகர், பெரிய உருவம்; திருத்தமாகவும் அழகாகவும் விநாயகருள்ளார். விநாயகருக்கு நான்கு கைகள். இவர் ஹரித்திரா கணபதி.*
7. *வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் ஒரு முகத்துடனும் நான்கு கைகளுடனும் திகழ்கின்றனர். மிக அழகிய வடிவமாக முட்டைத் திருவாசியுடன் திகழ்கின்றார். இவர் கைகளில் சக்தியும் வஜ்ரமும் காணப்படுகின்றன.*
8. *வள்ளி, தெய்வானை வேறுபாடு தெரியும் வண்ணம், சிலை செதுக்கிய கற்களே தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளன. வள்ளி தெய்வானை சமேத சுப்பிரமணியர் மயிலுடன் காணப்படுவது வேறுபாடான அமைப்பு.*

9. கருவறையிலுள்ள சண்டேசுவரர் திருவுருவம் கவினார்ந்த கலை வடிவம்.

10. தென்பக்கமுள்ள தட்சிணாமூர்த்தி, மேற்கு பக்கமுள்ள அண்ணா மலையார் ஆகியன மிகுந்த வனப்புடையன. ஒரே கல்லில் மலை, சனகாதி முனிவர்கள், முயலகன், தட்சிணாமூர்த்தி வடிக்கப்பட்டிருக் கின்றனர். ஆலமரம் இவ்வுருவத்தில் கிடையாது. அண்ணாமலையார் உருவின் மேல் பிரம்மா அன்னப் பறவை மீதூர்ந்த வண்ணமி ருப்பது நோக்கத்தக்கது.

11. நான்முகன் மூன்று தலைகளுடன் நின்ற கோலத்திலுள்ளார்.

12. சப்தகன்னியர், சூரியன் சந்திரன், சனீசுவரன் ஆகியோருக்கும் திருவுருவங்களுள்ளன.

13. கட்டுரையின் பிற்பகுதி இங்குள்ள பதின்மூன்று செப்புத் திருமேனிகள் பற்றிய விவரங்களைத் தருகின்றது. இவை அனைத்தும் சோழர், பாண்டியர் காலத்தவை. பாதுகாப்புக் கருதி இவை பத்திரமாக வைக்கப்பட்டுள்ளன. இவற்றை அடிக்கடி பார்க்க இயலவில்லை.

## மேற்கோள் விளக்கம்

1. வித்துவான் மா.சிவகுருநாத பிள்ளை (1991)-சிவவடிவங்கள், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், பக்.18.19.

2. டாக்டர் தே.சொக்கலிங்கம் அவர்கள் குடும்பத்தாருக்கு இக் கோயிலுள்ள திருமாவில் நிலங்கள் உள்ளன. இவரின் முன்னோர்கள் நூற்றைம்பது ஆண்டுகளாக இக்கிராமத்தில் சொந்தப் பண்ணை வைத்துப் பராமரித்து வந்துள்ளனர்.

3. பு.மா. ஜயசெந்தில் நாதன் (1995) திருமுறைத்தலங்கல் 141 உஸ்மான் ரோடு, தமிழ் நிலையம், சென்னை,17, ப.597

4. என்.சேதுராமன் (1976) அருளுடைச் சோழ மண்டலம், ராமன் அன்ட் ராமன், கும்பகோணம், பக்.12-13.

5. வை.கணபதி ஸ்தபதி (1978) சிற்பச் செந்நூல், தொழில் நுட்பக் கல்வி இயக்ககம், தமிழ்நாடு, சென்னை 600 025, ப.46.

6. இவ்வம்மையின் ஆபங்க அமைப்பைக் கண்டு சிலர் இது நடராசரொடு கூடிய சிவகாமியம்மனைத் தனியே பிரித்துத் தனி அம்மன் ஆக்கிவிட்டனர் என்று கருதுகின்றனர். அம்மை படத்தைக் காட்டியபோது சிவஸ்ரீ செல்வமணிக் குருக்கள் இவ்வாறு கூறினார்.

7. பின்னிணைப்பு எண்1 காண்க.

8. மா.சந்திரமூர்த்தி (1994) சூரக்குடிக் கோயில், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், ப.75

9. மா.சந்திரமூர்த்தி (1998) இலுப்பைக்குடி கோயில் மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம் ப.30

10. ச.தண்டபாணி தேசிகர் (1992) கணபதி, திருவாவடுதுறை ஆதீனம், திருவாவடுதுறை ,மூன்றாம் பதிப்பு. பக்.49

11. T.A.Gopinatha Rao (1968)- Elements of Hindu I Conography Motilal Banarsidass, Bangalow Road, Jawaharnagar, Delhi-7, Second edition, Vol. II Part-II p.46

12. அதற்குரிய சிற்ப நூல் பெயர் தெரியவில்லை. சிலையில் காலுக்கு ஆதரவாகச் சிற்பி அதனைச் செதுக்கியிருக்கின்றான்.

13. நாவல் பாக்கம் ஸ்ரீ தேவநாதாச்சாரியார் (1989) சிற்பத்தினம், சரஸ்வதி மகால் நூலகம், தஞ்சாவூர், பக்.499- 500

14. நா. கதிரைவேற்பிள்ளை (ஆ.இ) சுப்பிரமணிய பராக்கிரமம், வித்தியாசாகர அச்சுக்கூடம், சென்னை, ப.313

15. மேலது, பக். 268-271

16. மேலது.

17. இக்கோயிலைச் செல்வி தி.ரமா அவர்கள் ஆய்வுக்கு எடுத்துக் கொண்டுள்ளார்கள், கள ஆய்வுக்குப் போன போது கண்ட உண்மை.

18. நெறியாளர் தெரிவித்தது.

19. சா.கணேசன் (1992) பிள்ளையார்பட்டி தலவரலாறு கற்பக விநாயகர் அறநிலை, பிள்ளையார்பட்டி, ப.71

20. இந்த ஆண்டு உடன் பயிலும் வகுப்புத் தோழர்களுடன் பெருங்களூர், இராங்கியம், திருக்களம்பூர், வலையபட்டி, பிரான்மலை, கல்லாங்குடி, ஆகிய ஊர்ச் சிவன் கோயிலுக்குச் சென்றோம். எங்கும் இவ்வாறில்லை. திருக்களம்பூரில் அன்னப் பறவையுடன் தாழம்பூவும் செதுக்கப்பட்டிருந்தது.

21. மா.சந்திரமூர்த்தி (1996) வயிரவன் கோயில் மணிவாசகர் பதிப்பகம், சென்னை. 600 108, ப.92

22. மா.சந்திரமூர்த்தி (1994)- சூரக்குடிக் கோயில், மணிவாசகர் பதிப்பகம், சென்னை 600 108, ப.

# ஐந்தாமியல்

# திருக்கோயில் கிரியைகள்

5.0. பூசை என்னும் கிரியை

5.1. மரபு வழி வருதல்

5.2. நான்கு காலப் பூசை

5.2.1. காலை சந்திபூசை

5.2.2. உச்சிக்காலப் பூசை

5.2.3. சாயரட்சைப் பூசை

5.2.4. அருத்தயாமப் பூசை

5.2.5. நித்திய பூசை நிகழ்ச்சிகள்

5.2.6. அபிஷேகமும் அலங்காரமும்

5.2.7. நைவேத்தியம்

5.2.8. தீபாராதனை

5.3.1. நைமித்திக கிரியை: பிரதோஷம்

5.3.2. திருக்கார்த்திகை

5.4. திருவிழாக்கள்

5.4.1. ஆனித்திருமஞ்சனமும் மார்கழித் தரிசனமும்

5.4.2. சால்புடைய சம்பா சஷ்டி

5.4.3. திருவிழாக் கொண்டாட்டம்

5.5. திருக்குடமுழுக்கு

5.6. தெய்வ அச்சமும் நம்பிக்கையும்

# ஐந்தாமியல்
# திருக்கோயில் கிரியைகள்

## 5.0. பூசை என்னும் கிரியை

சிவன் கோயில்களில் நடைபெறும் கிரியைகள் மூன்று வகையானவை. அவையாவன:

1. நித்தியக் கிரியைகள்
2. நைமித்திகக் கிரியைகள்
3. காமியக் கிரியைகள்.

நாள்தோறும் நிகழுகின்ற கிரியைகள் நித்தியக் கிரியைகள் எனப்படும். நிமித்தம் என்பது காரணம்; எனவே நைமித்திகக் கிரியைகள் காரணங் கொண்டு நிகழ்வன. ஏதேனும் ஒன்றை விரும்பிச் செய்யப்படும் கிரியைகள் காமியக் கிரியைகள் எனப்பெறும்.

திருக்கோயில்களில் நடைபெறும் கிரியையைப் பூசை' என்று மக்கள் சொல்லுகின்றனர். ஒவ்வொரு நாளும் அந்த அந்தக் கோயிலுக்குரிய ஆகம மரபுக்கு ஏற்பப் பூசை முறை நடைபெறும். 'பூசை ஒவ்வொரு நாளும் அவ்வக் கோவில்களுக்கமைந்த வசதி களுக்கும் மரபுகளுக்கும் ஏற்பப் பல முறை நிகழும்.'[1] ஆகமங்கள் உத்தம பூசையாக எட்டுக் கால பூசையைக் கூறுகின்றன. தமி ழகக் கோயில்களில் பெரும்பாலும் ஆறு காலப் பூசைகளே நிகழ்கின்றன.

## 5.1. மரபு வழி வருதல்

திருக்கோயில்களில் நாள்தோறும் ஒரு முறையேனும் பூசை நடத்தப்பட வேண்டும். சிவாகமங்கள் பூசை மரபுகளைத் தெளிவாக வரையறுத்திருக்கின்றன. யார் யார் எவ்வாகமத்தின் படி தீக்கை பெற்றனரோ அவர்கள் அவ் ஆகம முறையையே அநுட்டிக்க வேண்டும் என்றும் எந்த ஆகம விதிகளைப் பின்பற்றிக் கோயில் கட்டிப் பிரதிட்டை செய்யப்பட்டதோ அந்த ஆகம முறையிலேயே நித்திய நைமித்திக பூசை, விழா முதலியன

நடத்தப்பெற வேண்டும். என்றும் ஆகம மரபு மாறின் கழுவாய் செய்ய வேண்டும் என்றும் ஆகமங்கள் தெரிவிக்கின்றன.

திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் என்ன ஆகம முறையைப் பின்பற்றிக் கட்டினார்கள் என்று அறியமுடிய வில்லை. இதனைக் கண்டறிவது விரிந்த ஆய்வாக- தனி யாராய்ச்சியாக- மேற்கொள்ளத்தக்கது. எனினும் இங்குக் காரணாகமப்படியே பூசைகள் நடைபெறுவதாகக் கூறுகின்றனர். செட்டிநாட்டிலுள்ள சிவன் கோயில்கள் பெரும்பாலானவற்றில் காரணாகமமே பின்பற்றப்படுகிறது.

## 5.2. நான்கு கால பூசை

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் நித்திய பூசையாக நான்கு கால பூசை நடைபெறுகின்றது.

1. காலை சந்தி பூசை
2. உச்சிக் காலபூசை
3. சாயரட்சை பூசை
4. அர்த்தயாமப் பூசை

பெரும்பாலும், கோயில்களில் ஆறு கால பூசையே நிகழும்; இதனை 'ஷட் கால பூசை' என்பர். சில கோயில்களில் காலை, உச்சி, மாலை என்று மூன்று வேளை மட்டும் பூசை நடைபெறும்; வேறு சில கோயில்களில் காலையிலும் மாலையிலும் ஆக இரு வேளை மட்டும் பூசை நிகழுதலுமுண்டு.

### 5.2.1. காலை சந்தி பூசை

இங்குக் காலை சந்தி பூசையே முதல் பூசையாகும். இறைவன் பள்ளியறைக்குச் செல்வதில்லையாதலால் பள்ளியறையிலிருந்து இறைவனைக் கருவறைக்கு எழுந்தருளச் செய்ய வேண்டுவதில்லை.

காலை சந்தி பூசையைக் காலைப் பூசை என்றும் அழைப்பர். சூரியன் உதித்த பின் ஏழரை நாழிகைகளுக்கு முன் இப்பூசை யைச் செய்தல் வேண்டும். இப்பூசையில் முதற்கண் சூரிய பூசை இடம்பெறும். இதனையடுத்து கணேசரது பூசையும் துவார பூசையும் நிகழும். பின் மூலலிங்கத்திற்கும் பரிவார தெய்வங் களுக்கும் பூசை விரிவாக நடைபெறும். 'ஆவாகனம், அபிஷேகம், அலங்காரம், தீபாராதனை, அருச்சனை, தோத்திரம், நிருத்தியம் முதலியன பூசையின் அம்சங்கள்,[2] பூசையின் முடிவில் நித்தியாக்கினி காரியமும் நித்தியபலியும் நடைபெறும்.

## 5.2.2. உச்சிக்காலப் பூசை

*உச்சிகாலப் பூசை, நடுப்பகலில் நடைபெறும். சிவாச்சாரியார் நித்திய கடன்களை முடித்து விக்கிநேசுவர பூசை, முதலிய பூர்வாங்கக் கிரியைகளை நிறைவேற்றி, ஸ்நபபூசை செய்து, அபிஷேகித்துப் பின் அலங்கரித்து ஆவரண பூசை வரையும் முடித்துத் தூபதீப ஆராதனைகளைச் செய்வர். பின்னர் நடேசர் சக்தியீறாகப் பூசை நடைபெறும். திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில், வயிரவருக்கு உச்சிக்காலப் பூசை உண்டு. இவருக்கு அபிஷேகம் செய்து வடை மாலை சாத்தப் பெறும். இவ்வாறு பூசை நிறைவேறியதும் சிவ நிர்மாலியத்தைச் சண்டே சுவரரிடம் சமர்ப்பிப்பதுடன் உச்சிக் கால பூசை நிறைவுறும்.*

## 5.2.3. சாயரட்சைப் பூசை

*இப்பூசையைப் சாயங்கால பூசை என்றும் பிரதோஷ கால பூசை என்றும் அழைப்பர். இரவின் தொடக்கமான மாலைப் பொழுதே பிரதோஷம். இப்பூசை சூரியன் மறைவதற்கு மூன்றே முக்கால் நாழிகைக்கு முன் நிகழ வேண்டியது. மாலை 5.30 மணி அளவில் தொடங்குகின்றது. கணேசரையும் நடராசரையும் பின் மூவரையும் சிவபெருமானுடைய மூர்த்தி பேதங்களையும் அம்மையையும் உரியவாறு பூசித்தல் இப்பூசையின் முக்கிய அம்சமாகும். திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலின் மூலவர், அம்மை, வயிரவர் ஆகிவர்களுக்கு அபிடேகம், ஆராதனை, நைவேத்தியம் ஆகியன நடைபெறும்.*

## 5.2.4. அர்த்தயாம பூசை

*சாயரட்சை பூசைக்கும் அர்த்தயாம பூசைக்கும் இடையே நிகழ்வது இரண்டாங் கால பூசை. இப்பூசை, திருப்பாதாளேச் சுவரர் திருக்கோயிலில் நடைபெறவில்லை. சாயரட்சை பூசைக் குப் பின் அர்த்தயாமப் பூசை நாற்பது நாழிகை அளவில் இங்குச் செய்யப்பெறுகிறது. இப்பூசையில் துவார பூசை கிடையாது. மூலவர், அம்மைக்குப் பூசை செய்த பின் சண்டேசுவரர் பூசை இடம்பெறும். இது முடிந்ததும் வயிரவர் கருவறை அடைந்து முறைப்படி நிகழ்த்தித் திறவுகோலை அவர் முன் வைத்துக் கோயில் காவலை அவரிடம் ஒப்புவிப்பார்.*

*இங்குப் பள்ளியறை இன்மையால், அர்த்தயாம பூசை சுருக்க மாகவே நிகழும்.*

## 5.2.5. நித்திய பூசை நிகழ்ச்சிகள்

ஒவ்வொரு பூசை நேரத்திலும் கடவுளரின் பழைய அலங் காரங்களைக் களைந்துவிட்டு அபிஷேகம் செய்வர்; எண்ணெய், நெய், பால், நீர், பன்னீர், இளநீர் ஆகியவற்றால் நீராட்டுவர்; மீ ண்டும் ஆடை அணி மாலை சந்தனம் முதலியவற்றால் அழகு செய்வர்; அதன் பின்னர் நைவேத்தியம் நடைபெறும். இவை எல்லாம் கருவறையில் நிகழும். இதன் பின் தீபாராதனை நடக்கும். தொடர்ந்து பதினாறு வகையான பணிவிடைகள் (ஷோட ஸோபசாரங்கள்) நடந்திடும். இச்சமயத்தில் பல வகையான இசைக் கருவிகள் ஒலிக்கும்.

இதன்பின்னர் வேதங்கள் முழங்கவும் தேவாரம் ஓதவும் பெறும். திருமாவில் வேத கோஷ்டியோ தேவாரக் குழுவோ இல்லை; தொன்றுதொட்டு இருந்து வந்தமைக்குச் சான்றும் இல்லை.

## 5.2.6. அபிஷேகமும் அலங்காரமும்

நான்கு கால பூசையிலும் காணப்படும் பொதுவான கூறுகள் சில உண்டு. அவற்றுள் முதற்கண் குறிக்கத்தக்கது, அபிஷேகம், அபிஷேகத்திற்கென இரு நாழிகைகள் ஒவ்வொரு பூசையிலும் ஒதுக்கப்படல் வேண்டுமென ஆகம விதி கூறுகின்றது. மேலும், சிவபெருமான் அபிஷேகப்பிரியர் ஆதலின் சிவன் கோயிலில் அபிஷேகம் இன்றியமையாத ஒரு சடங்காகும். அபிஷேகத்திற்குத் தூய நீர் வேண்டும். திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில், கோயிலுள்ள கிணற்று நீரே தீர்த்தமாகும். வேறு குளமோ ஆறோ ஈண்டில்லை. அபிஷேகத்திற்குப் பல்வேறு பொருளுண்டு; இன்ன பொருளால் இறைவனுக்கு அபிஷேகம் செய்தால் இன்ன பயன் விளையும் என்று அறிவுறுத்துகின்றன. அதன் விவரம்:

### அபிஷேகப் பயன்

| அபிஷேகத் திரவியம் | பயன் |
|---|---|
| 1. சந்தனாதிதைலம் | சுகம் |
| 2. அரிசிமாப்பொடி | மலநாசம் |
| 3. நெல்லிமுள்ளி | ரோகநாசனம் |
| 4. மஞ்சள் பொடி | இராஜவசியம் |
| 5. ரஸபஞ்சாமிர்தம் | வெற்றி அனுகூலம் |
| 6. பழபஞ்சாமிர்தம் | செல்வப் பெருக்கு |
| 7. பஞ்சலோகாபிஷேகம் | மந்திர சக்தி |
| 8. பால் | ஆயுள் விருத்தி,ஆரோக்கியம் |

| | |
|---|---|
| 9. தயிர் | பிரஜாவிருத்தி |
| 10.நெய் | மோட்சம் |
| 11.தேன் | சங்கீதவன்மை |
| 12.கருப்பஞ்சாறு | நித்யசுகம் |
| 13.நாட்டுச் சர்க்கரை | சத்ருநாசம் |
| 14.வாழைப்பழம் | பயிர்விருத்தி |
| 15.பலாப்பழம் | லோகவசியம் |
| 16.மாம்பழம் | சகல வெற்றி |
| 17.தம்பரத்தம்பழம் | பூமிலாபம் |
| 18.மாதுளம் பழம் | பகை நீங்கல் |
| 19.நார்த்தம்பழம் | புத்திசாலித் தனமும் வித்தையும் கிடைக்கும் |
| 20.எலுமிச்சம்பழம் | மிருத்யு நாசம் |
| 21.தேங்காய்த்துருவல் | போஜனம், இராசபதவி |
| 22.இளநீர் | சத்புத்திரபேறும் மிருத்யுநாசமும் |
| 23.கோரோசனை | தீர்க்காயுள் |
| 24.பச்சைக் கற்பூரம் | பயநாசம் |
| 25.கஸ்தூரி | வெற்றி |
| 26.பன்னீர் | சாலோக்கியம் |
| 27.சந்தனக் குழம்பு | சாயுஜ்யம், புனிதத்தன்மை |
| 28.சகஸ்ராபிஷேக தட்டால் அபிஷேகம் | அறிவு ஞானம் உண்டாகும் |
| 29.ஸ்நபனகலசம் | சர்வசௌபாக்கியம் |

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் பால், தயிர், இளநீர், தேன், பஞ்சாமிர்தம், பன்னீர் ஆகியனவே அபிஷேகம் செய்யப் பெறுகின்றன. அபிஷேகம் செய்பவர்கள் வழக்கமாக இவற்றையே அபிஷேகத்துக்குக் கொடுத்து வருகின்றனர்.

அபிஷேகம் முடிந்ததும் கடவுளர்க்கு அலங்காரம் செய்யப் பெறுகிறது. மூர்த்தங்களைக் கவின்பெறச் சிவாச்சாரியார் அழகு தோன்ற அலங்கரிப்பர். பழக்கமிக்கவர்களே திறம்பட அழகு செய்ய முடியும். அலங்காரம் மூர்த்தத்துக்கு மூர்த்தம் மாறும். மூலஸ்தானம் சிவலிங்கத்திற்கு அலங்காரம் செய்வது எளிது. திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் சிவாச்சாரியார், சந்தனக் காப்புச் செய்வதில் வல்லவராக விளங்குகிறார். சகஜாரிநாயகிக்குச் சந்தனக் காப்புச் செய்வதில் வல்லவராக விளங்குகிறார். சகஜாரி நாயகிக்குச் சந்தனக் காப்புச் செய்தபோது, அம்மை கண்களால் கண்டு எதிரே நிற்பதுபோலக் காட்சி தந்தாள். சிவபெருமானுக்கு வெள்ளிக் கவசமும் நாகாபரணமும் உள்ளன. இவை மிக வனப்பு உடை யவை.

## 5.2.7. நைவேத்தியம்

நித்திய கிரியையில் அடுத்து இடம்பெறுவது நைவேத்தியம். நைவேத்தியம் தயாரிப்பதற்கே திருக்கோயில்களில் மடைப்பள்ளி அமைகின்றது. திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் நாள் தோறும் சுத்தோதனமே நைவேத்தியமாகும். இது நன்கு வெந்த வெறும் அன்னமாகும். 'அரிசியைவிட மூன்று மடங்கு பாலும், பாலில் பாதியளவு நீரும், நீரில் பாதியளவு பயற்றம் பருப்பும், நெய்யும் கலந்து பக்குவமாக ஆக்கினால் அது பாயாசமாகும். அரிசியின் பாதி பருப்பும் உரிய உப்பும் மிளகுப் பொடியும் எள்ளுப் பொடியும் கலந்த அன்னம் எள்ளனமாகும். அரிசியில் மூன்றிலொரு பங்கு பருப்பும் முன்கூறிய அளவு பாலும் கலந்து சமைப்பது பயற்றன்னமாகும். பாலில் பாதியளவு வெல்லமும் அதில் பாதியளவு நெய்யும் வாழைப் பழமும் கலந்து அமைவது சர்க்கரையன்னமாகும். இவ்வாறு இறைவனுக்குப் படைக்கும் அன்னங்களை ஐவகையாக்கிப் பஞ்சஹவிஸ் என்று ஆகமங் களுணர்த்துகின்றன.[3] ஆகமங்களில் பல்வேறு சிற்றுண்டிகளும் கடவுளர்க்குப் படைத்தற்குரியன என்று கூறப்பட்டிருக்கின்றன.

ஒவ்வொரு கோயிலிலும் ஒவ்வொரு வகையான உணவு வகைகள் சிறப்புடன் கடவுளர்க்குப் படைக்கப்படுகின்றன. "திருப்பதியில் ஒருவித வடை முக்கிய நைவேத்தியமாகும். மிக ருசியான அதிரசம் இராமேஸ்வரத்தில் நிவேதனம் செய்யப் படுகிறது. கேரளக் கோயில்களில் தனி ருசியுள்ள பாயாசம் நைவேத்திய மாகிறது"[4] கள்ளழகர் கோயிலில் மிளகு தோசை சிறப்பான நைவேத்தியம். இவ்வாறு திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் வயிரவருக்குப் படைக்கப்படும் 'நெய்வடை' மிகச் சிறந்த நைவேத்தியமாகும். இவ்வடையினை மாலையாகக் கோத்து இவருக்கு அணிவிக்கின்றனர்; வடைக்குரிய உழுந்தைப் பருப்புச் சிதைந்தும் சிதையாமலும் ஆட்டி நெய்யில் தட்டிப் போட்டுச் சுடுகின்றனர். இவ்வடை பொன் நிறமாகவும் முருக்குப் போல மொறுமொறு என்றும் சுவையாக இருக்கின்றது. நெய்யில் சுடுவதால் இந்த வடை பல நாள்களுக்கு கெட்டுப் போகாமல் இருக்கின்றது.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டால் (பு.ச.க. எண் 646) சந்நிதிக்குச் சாத்துப்படி நைவேத்தியம் ஆகியவற்றுக்கு நிலம் விடுக்கப்பட்ட மையை அறிய முடிகின்றது. இந்த நைவேத்தியம் குழித்தளிகை யாகும். குழித்தளிகை என்பது சுத்தான்னத்துடன் குழம்பு, வெஞ்சனம் ஆகியனவும் இறைவனுக்கும் நிவேதிக்கப்பட்டுப் படைக்கப் பெறும். இதற்காக ஆண்டுக்கு நான்கு கலம் நெல் வழங்கப் பட்டிருக்கிறது. இப்போது இந்த நைவேத்தியம், இல்லை.

நைவேத்தியம் படைக்கப்பட்டபின், நீர் நிரம்பிய தேங்காயைக் குடுமியுடன் சரியாக உடைத்துப் பின் குடுமியை நீக்கி நிவேதனம் செய்வர். பழம், வெற்றிலை பாக்கும் இதில் இடம் பெறும்.

## 5.2.8. தீபாராதனை

தூபதீபங் காட்டி நைவேத்தியம் நடந்ததும் தீபாராதனை தொடங்கும். வழிபாடு நிகழும்போது அபிஷேகம், அலங்காரம் போன்றவற்றில் மக்கள் கலந்து கொள்ளவில்லை என்றாலும் தீபாராதனை நிகழும்போது வீசும் தீப ஒளியில் இறைவன் அருட்கோலம் கண்டு வணங்குவர். திருமணமான பெண்கள், தங்கள் கழுத்திலுள்ள தாலியைத் தீப ஒளியில் காட்டி என்றும் சுமங்கலியாக இருக்க வேண்டும் என்று பிரார்த்திப்பர். திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் அன்றிப் பிற கோயில் களிலும் இதனைக் காணமுடியும்.

திருக்கோயில்களில் பல்வேறு வகையான தீபாராதனைகளை இறைவனுக்குச் செய்கின்றனர். தீபாராதனை செய்யும் தீபாரா தனை தட்டின் உருவத்துக்குத் தக்கவாறு அடியார்களடையும் பயனும் வேறுபடும். இன்ன தீபாராதனையைத் தெரிசித்தால் இன்ன பயன் கிட்டும் என்ற நம்பிக்கை மக்களிடையே காணப் படுகிறது.

| தீபாராதனை | பயன் |
|---|---|
| 1. ஷோடச உபசாரம் | ஆன்மசுத்தி |
| 2. ஐந்து அடுக்கு அலங்கார தீபம் பஞ்சகலைகள் | ஆன்மசுத்தி |
| 3. மூன்று அடுக்கு அலங்கார தீபம் தத்வதிரயம் | ஆன்மசுத்தி |
| 4. நாகதீபம் | புத்ரவிருத்தி |
| 5. ரிஷபதீபம் | பசுவிருத்தி |
| 6. புருஷா மிருக தீபம் | சகலசித்திகள் |
| 7. நட்சத்திர தீபம் | ரோக நிவர்த்தி வித்தைகள் கிட்டும் |
| 8. பூர்ண கும்பம் | மும்மலங்கள் நிவர்த்தி |
| 9. தூபதீபம் | சாரூபம் |

இவ்வாறு ஒவ்வொரு தீபாராதனையையும் தெரிசித்த அடியார்கள் உரிய பலனை அடைவார்கள்.

"தீபாராதனையின் முடிவில் எல்லாத் தீபங்களையும் பூர்ணகும்பத்தில் சமர்ப்பிக்க வேண்டும். இந்தப் பூரணகும்பம் எல்லாத் தீபங்களுக்கும் இருப்பிடமாகும். பஞ்சராத்ரீகதீபம், சக்தி தீபம் என இருவகைப் படுவதில் பாண்டி நாட்டில் சக்தி தீபம்தான் ஆதரிக்கப்படுகின்றது"[5]

என்ற கருத்து இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் ஐந்து முக தீபமும் ஏகமுக தீபமும் தாம் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. தீபாராதனை செய்யும்போது சிவாச்சாரியார் இறைவனுக்கு நேரே உயர்த்தி முதலில் இடைகண்ணுக்கு நேரிலும் பின்னர் வலக் கண், நெற்றி ஆகிய இடங்களிலும் காலிலிருந்து தலை வரையும் மூன்று முறை சுற்றிக் காட்டல் வேண்டும். முதலில் சுற்றிக் காட்டுவது உலக நன்மைக்காகும்; இரண்டாவது சுற்றிக் காட்டுவது கிராம நன்மைக்காகும்; மூன்றாவதாகச் சுற்றிக் காட்டுவது உயிர்களின் நன்மைக்காகும். தீபாராதனை முடிந்த பின் அருச்சனை நிகழும்.

திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் நித்திய கிரியைகள் ஆகம முறைப்படி மிக நன்றாக நடைபெறுகின்றன. சிவாச்சாரியார் அக்கறையுடனும் பயபக்தியுடனும் செயல் படுகிறார்.

## 5.3.1. நைமித்திக கிரியை: பிரதோஷம்

சிறப்பாகச் செய்யப்பெறும் வழிபாடு நைமித்திக கிரியை எனப்பெறும் இக்கிரியை வாரத்திற்கு ஒரு முறையோ இரு வாரங்களுக்கு ஒரு முறையோ மாதத்திற்கு ஒரு முறையோ ஆண்டுக்கு ஒரு முறையோ நிகழக் கூடும். ஒவ்வொரு மாதத்திலும் பிரதோஷத்தன்றும் கார்த்திகையன்றும் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் சிறப்பான வழிபாடு நிகழ்கின்றது.

> "ப்ர என்னும் வடசொல் அளவு கடந்ததான தன்மையை உணர்த்தும் தோஷம் என்னும் சொல் தீமையைக் குறிக்கும். எனவே பிரதோஷம் என்னும் சொல் விஷம் தோன்றியதால் அனைவருக்கும் மகத்தான தீமை ஏற்பட்டுப் பெருந்தொல்லையுண்டாக்கிய காலத்தை உணர்த்தும்"[6]

அமுதத்தை அடையக் கடலைக் கடைந்தபோது உண்டான விஷத்தால் தேவரும் பிறரும் வருந்தினர். உலகமும் அனைத்துத் தேவர்களும் சிவபெருமானை ஒரு மனமாகத் தங்களை அந்தக் கொடிய நஞ்சிடமிருந்து காத்தருளவேண்டி நின்ற காலம், பிரதோஷ காலமாகும். அக்காலை அனைவரும் மகிழச் சிவபெருமான் திருக்கைலையில் ஆனந்தத் தாண்டவம் செய்தார். அக்காலத்தில் எல்லாத் தேவர்களும், தேவதைகளும் சிவபெரு மானின் திருமுன் கூடியிருந்தார்கள்.

கடல் நஞ்சைச் சிவபெருமான் உண்ட வேளையே பிரதோஷ காலமாகும். சுக்கில பஷம், கிருஷ்ண பக்ஷம் ஆகிய இரு பக்ஷங்

களிலும் பதின்மூன்றாம் நாளில் வரும் இப்பிரதோஷ காலத்தில் சிவவழிபாடு நடைபெறும்.

பிரதோஷ காலம் சூரியன் மறைவதோடு தொடங்குகிறது. இக்காலமே சிவபெருமான் அடியார்களை தன் வசப்படுத்திக் கொள்ளும் காலமாகும். அடியார்கள் பிரதோஷ காலத்தில் நந்தி தேவருக்கு நெய் விளக்கு இட்டு வெல்லம் கலந்த அரிசியை நிவேதனமாக கொடுப்பர். அருகம் புல் ஆராதனையும் வில்வார்ச்சனையும் செய்வர்.

பிரதோஷ தினத்தன்று மூல மூர்த்தியான சிவலிங்க மூர்த்தியைச் சோம சூக்த பிரதக்ஷனம் செய்ய வேண்டும். முதலில் சிவலிங்கத்தையும் நந்தி தேவரையும் வணங்கிக் கொண்டு அப்பிரதக்ஷனமாகச் சண்டிகேசுவரர் சந்நிதி வரை சென்று அவரை வணங்கி அப்படியே பிரதக்ஷணமாகத் திரும்பி வந்து முன் போலவே சிவலிங்கப் பெருமானையும் நந்தியையும் எப்போதும் போல ஆலயத்தை வலம் வரும் போது ஸ்வாமி அபிஷேக தீர்த்தம் விழும் நிர்மாலியத் தொட்டியைக் கடக்காமல் அப்படியே வந்த வழியே திரும்ப வேண்டும்.

இவ்வாறு அப்பிரதக்ஷனமாக வந்து நந்தி தேவரிடம் நின்ற படியே அவருடைய இரு கொம்புகளுக்கு நடுவே சிவலிங்க மூர்த்தியைக் கண்டு வணங்கல் முறையாகும். இப்படி மூன்று முறை வலம்வரின் பல அஸ்வமேத யாகம் செய்த பயன் கிட்டும். அன்று சிவபெருமானுக்கும் அம்மைக்கும் அபிஷேகம், அலங் காரம், ஆராதனை, நிவேதனம் ஆகியன செய்வித்து வணங்க வேண்டும். பின்னர் தேவியுடன் கூடிய சந்திர சேகர மூர்த்தியை ரிஷப வாகனத்தில் எழுந்தருளச் செய்து (விருஷாருடர்) வேத பாராயணமும், தேவார பாராயணமும் ஒலிக்கச் சுவாமி ஆலயத்தை மூன்று முறை வலம் வரும் பொழுது அடியார்களும் கூடச் சென்று வலம் வரல் வேண்டும். இது பிரதோஷத்தில் அடியார்கள் இறைவனை வழிபடும் முறையாகும்.

பிரதோஷ வழிபாடு சிவன் கோயில்களில் சிறப்பாக நடைபெறும்.[7] இவ்வழிபாட்டில் கலந்து கொள்ள மக்கள் பெரும் திரளாகக் கூடுவர். திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் மேலே விளக்கியவாறு விரிவாக பிரதோஷ வழிபாடு நடக்க வில்லை. ஏனெனில் கோயிலுக்கு வருகின்ற மக்கள் எண்ணிக்கை குறைவு. பொருள் வருவாய் குறைந்த உழைப்பாளி மக்களே கோயிலைச் சுற்றி வாழ்தலால் இத்தகைய வழிபாட்டில் மக்கள் அக்கறை காட்டவில்லை. எனினும் தன்னால் இயன்ற வரை சிவாச்சாரியார் பிரதோஷ கால பூசையைத் தவறாது செய்து வருகின்றார்.

### 5.3.2. திருக்கார்த்திகை

ஒவ்வொரு மாதத்திலும் கார்த்திகை நட்சத்திரத்தன்று முருகப் பெருமானுக்கு சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது. இங்கு நடைபெறும் எல்லாச் சிறப்பு வழிபாடுகளும் சிவாச்சாரியார், மெய்க்காவல் ஆகியோர் முயற்சியால் நிகழ்வனவே.

### 5.4. திருவிழாக்கள்

கோயில் என்றால் திருவிழா இருக்கும். திருவிழா என்பது கோயிலின் தொடர்பின்றி நிகழாது. நிமித்த பூசையை ஆதார மாகக் கொண்டு பல கோயில்களில் திருவிழாக்கள் நடைபெறும். "ஆண்டுக்கு ஒரு முறை நடைபெறும் திருவிழாவை மகோற்சவம் என்றும் பிரம்மோற்சவம் என்றும் கூறுவர். மகோற்சவம் என்பதை மகா-உத்-ஸம் என்று பிரித்து உயர்ந்த படைத்தல் முதலிய தொழில்களைக் குறிக்கும் குறி என்றும். பிரம்மோற்சவம் என்பதற்கு பெரிய திருவிழா என்றும் பொருள்'.[8] பிரமோற் சவத்தில் தேரோட்டம் நடைபெறுதலால் இதனை தேர்த் திருவிழா (ரதோத்ஸவம்) என்றும் இயம்புவர்.

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில்கலில் ஆண்டு தோறும் மூன்று திருவிழாக்கள் நடைபெறுகின்றன.

1. ஆனித் திருமஞ்சனம்
2. கார்த்திகைச் சம்பாசஷ்டி
3. மார்கழித் தரிசனம்

### 5.4.1. ஆனித் திருமஞ்சனம் மார்கழித் தரிசனம்

சிதம்பரத்தில் ஆனித் திருமஞ்சனமும், மார்கழித் தரிசனமும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. ஆனி மாதம் உத்திர நட்சத்திரம் வரும் நாளில் இவ்விழா சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. இவ்விழா நடராஜருக்கும் மாணிக்கவாசகருக்கும் சிறப்புத் தருகின்ற விழாவாகும்.

ஆனித் திருமஞ்சனம் பத்து நாள் உற்சவமாக இங்குக் கொண்டாடப்படுகிறது. சுவாமி, அம்மன் ஆகியோருக்கு சிறப்பாக திருமஞ்சனம் செய்யப் பெறும். இவ்விழாவில் நடராஜர், சிவகாமி அம்மை, மாணிக்கவாசகர் மூவரும் உலா போதுவர். இவ்வுலாவில் சுவாமி திருக்கோவிலைச் சுற்றி வரும். அப்போது குஞ்சித நடனமாகச் சுவாமிகளைத் தூக்கித் தோள்மீது வைத்துக் கொண்டு அங்குமிங்குமாய் ஆடுவர். சிதம்பரத்தில் ஆடுவது போல் இங்கும் ஆட்டம் உண்டு.

நடராசர், சிவகாமியைத் தனியே விடுத்து எழுந்தருளுவர்: அவர் தாசி வீட்டுக்குச் சென்றதாகச் சுந்தரர் சொல்ல அம்மை ஊடி நின்றாள்; அக்காலை மாணிக்கவாசகர் அம்மையிடம் சென்று ஊடல் நீக்குவார். இதனால் இவ்விழா ஊடல் விழா எனப்படும். ஆனி மாதம் கேட்டை நட்சத்திரத்தன்று மாணிக்க வாசகர் எழுந்தருளுவார். இத்தகைய ஊடல் விழா பல கோயில்களில் நடைபெறும்; ஊடலை நீக்கும் போது எல்லாச் சொத்துகளையும் சிவபெருமான் அம்மை பெயருக்கு எழுதிக் கொடுப்பர். அப்போது கோயில் சொத்து விவரம் முழுமையும் மக்கள் முன்னிலையில் படிக்கப் பெறும்.

ஆனித் திருமஞ்சன விழாவைப் பலரும் பங்குற்று நடத்தினர்.

## ஆனித் திருமஞ்சனம் மண்டகப்படி செய்வோர்

| விழாநாள் | மண்டகப்படிதார் |
|---|---|
| 1. முதல் நாள் | புதுக்கோட்டை சமஸ்தானம் |
| 2. இரண்டாம் நாள் | கானாடு, தொலையானூர், அடுகப்பட்டி முதலிய 108 ஊரைச் சேர்ந்த நாட்டார்கள். |
| 3. மூன்றாம் நாள் | ஊரார் |
| 4. நான்காம் நாள் | நகரத்தார்கள் |
| 5. ஐந்தாம் நாள் | . . . . . . . . . . . |
| 6. ஆறாம் நாள் | புதுக்கோட்டை சமஸ்தானம் |
| 7. ஏழாம் நாள் | சந்தனவிடுதி ஊரார் |
| 8. எட்டாம் நாள் | கோயில் ஊழியர்கள் |
| 9. ஒன்பதாம் நாள் | தேரோட்டம்-நாட்டார்கள் |
| 10.பத்தாம் நாள் | புதுக்கோட்டை சமஸ்தானம் |

பத்தாம் நாளன்று தீர்த்தங் கொடுக்கலாகும். முன்பு தீர்த்தங் கொடுக்க திருக் கன்மாய்க்குப் போவது வழக்கம். இப்போது கோயிலிலேயே தீர்த்தம் கொடுக்கப் படுகிறது.

மார்கழி மாதம் திருவாதிரை அன்று ஒரு நாள் திருவாதிரைத் திருநாள் (ஆருத்திரா தரிசனம்) கொண்டாடப்படுகிறது. இவ் விழாவில் நடராசப் பெருமானுக்குச் சிறப்பாக அபிஷேகங்கள் செய்யப்படுகின்றன. நடராசர், சிவகாமி அம்மை, மாணிக்க வாசகர் ஆகிய மூவருமே திரு வீதி உலா போதுவர். மார்கழித் திருவாதிரைத் திருவிழா ஊரார் மண்டகப்படியாகும்.

இந்த இரண்டு விழாக்களும் நடராசரோடும் மாணிக்கவாசக ரோடும் தொடர்புடையவை. இவ்விழாக்களில் மாணிக்க வாசகரே போற்றப் பெறுகிறார். ஆதலின் பாண்டிய நாட்டு அமைச்சரும் அடியாருமான மாணிக்கவாசகருக்கு முதன்மையும்

சிறப்பும் நல்கவே இவ்விருவிழாக்கள் பண்டுதொட்டுப் பாண்டியர் கோவிலில் கொண்டாடப் பெறுகின்றது.

## 5.4.2.சால்புடைய சம்பாசஷ்டி

சிவன் கோயில்களில் எல்லாம் சுப்பிரமணியருக்குத் தலைமை நல்கும் கந்த சஷ்டி விழாவே ஐப்பசித் திங்களில் கொண்டாடப் பெறும். ஆனால் வைரவருக்குத் தலைமை கொடுக்கும் திருக் கோயில்களில் கார்த்திகை மாதம் சம்பா சஷ்டி விழா சிறப்பாக நடைபெறுகின்றது. நகரத்தார்களுக்குரிய வைரவன் கோயிலிலும் சம்பா சஷ்டி விழா கொண்டாடப் பெறுகிறது. இவ்விழாவின் பெயர்க் காரணத்தை

> "சம்பாசுரன் என்ற அசுரனை அழித்துத் தேவர்களைக் காத்தார் வைரவர் எனத் தலபுராணம் உள்ளது. அதனைக் கொண்டாடவே இங்குச் சம்பா சஷ்டி விழாத் தொடங்கப்பட்டது"[9]

என்பதால் அறிய முடிகிறது. சம்பாசஷ்டி என்ற சொல் சம்ஹார சஷ்டி என்பதன் திரிபு என்றும் கும்பா சஷ்டி என்பதே சம்பா சஷ்டி என்று மருவியது. என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவன பொருத்தமற்றவை.[10]

சம்பாசுரனைக் கொன்றமையாலேயே இது சம்பாசஷ்டி எனப்படும் சுப்பிரமணியரைப் போல வைரவரும் சிவபெருமானுடைய படைப்பே. இவரைச் சிவன் மைந்தராகக் கொள்ளாமல் சிவனுடைய ருபபேதமாகக் கொள்ளுகின்றனர். வயிரவருக்குத் தனி முக்கியத்துவம் உள்ள சிவன் கோயில்களில் எல்லாம் கந்தர் சஷ்டி கொண்டாடப்படாமல் சம்பாசஷ்டியே கொண்டாடப் படுகிறது. இவ்விழா சூரசம்ஹார விழா போலச் சிறப்பாக நிகழ் கிறது. வயிரவருக்கு முருகனுக்கு உரிய இடம்கொடுத்தமையால் தான் முருகன் சந்நிதி தொடக்க காலத்தில் திருப்பாதாளேச்சு வரர் திருக்கோயிலில் அமையவில்லை போலும்.

சஷ்டி என்பதற்குத் தக இவ்விழா ஆறு நாள் விழாவாகத் கொண்டாடப்படுகிறது. வைரவர் எழுந்தருளிச் சம்பாசுரனை சம்காரம் செய்கின்றார்.

**சம்பா சஷ்டி – ஆறுவிழா**

| விழா | உபயதார் |
|---|---|
| 1. முதல்நாள் | புதுக்கோட்டை சமஸ்தானம் |
| 2. இரண்டாம் நாள் | கானாட்டார்கள் |
| 3. மூன்றாம் நாள் | ஊரார்கள் |
| 4. நான்காம் நாள் | நகரத்தார்கள் |
| 5. ஐந்தாம் நாள் | பிற ஊரார்கள் |
| 6. ஆறாம் நாள் | கோயில் ஊழியர்கள் |

## 5.4.3. திருவிழாக் கொண்டாட்டம்

திருக்கோயில் திருவிழாக்களில் தெய்வமூர்த்தங்களை வீதிவலம் எடுத்து வருவது முக்கியமானது; இது காலை மாலை இரு வேளைகளிலும் நடைபெறும். காலை நேர பவனி காலை விழா எனப்படும் இவ்விழாவில் மிகுதியான அலங்காரமோ, ஆடம்பரமோ இராது. பெரும்பாலும் சாமியைச் சப்பரத்திலேயே எழுந்தருளச் செய்வர். இரவு நடைபெறும் விழாவில் நடனம், நாட்டியம், வாண வேடிக்கை போன்றவை நிகழும்.

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் காலை விழா, இரவு விழாக்களில் கூடச் சுவாமியை உலாவாக எடுத்துச் செல்லுவ தில்லை சுவாமி தூக்கப் போதிய மக்கள் வருவதில்லை. எனவே இக்கோயில் திருவிழாக்கள் மிக எளிமையாக ஆனால் தவறாமல் நிகழ்ந்து விடுகின்றன.

இக்கோயில் திருவிழாக்களில் கொடியேற்ற கோயிலில் கொடி மரம் இல்லை. இங்கு நடைபெறும் விழாக்கள் பக்தோற்சவம் அன்றி பிரம்மோற்சவம் அன்று; மேலும் சோமாஸ்கந்தர் திருவிழாவுக்கு எழுந்தருளினால்தான் காப்புக் கட்டுவர். ஈண்டு நடராசரும், சிவகாமியும் மாணிக்கவாசகரும், வைரவருமே திருவிழாவுக்கு எழுந்தருளுகின்றனர். ஆதலால் கொடியேற்றமோ காப்பு அவிழ்த்தலோ ஈங்கு இல்லை.

மக்கள் இறைவனைத் தேடிச் சென்ற போதிலும் இறைவன் மக்களை நாடிச் சென்றமைக்கு திருவிழாக்கள் சான்றாகின்றன.

> "கோயிலுக்குச் செல்ல இயலாத பக்தர்கள் பலர் இருந்தனர் இருக்கின்றனர். முதிர்ந்த வயது, நடக்க இயலாமை, உடலுறுப்புக் குன்றியிருத்தல், நோய், தீட்டு, கீழ்ச் சாதி என்ற காரணத்தால் கோயிலுக்குள் விடப்படாதிருந்தது இவைபோன்ற நிலைகளில் இறைவனைத் தேடிச் செல்ல இயலாதவர்களுக்காக, இறைவன் தானே அவர்களைத் தேடிச் சென்றான்"[11]

இதுதான் திருவிழாவின் நோக்கம். திருவிழாக்கள், இறைவனை மக்களை நோக்கிச் செலுத்த நல் வாய்ப்பை நல்குகிறது.

திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் திருவிழாக்களைக் கொண்டாடப் போதிய வாகனங்கள் இல்லை.[12] இருந்தனவும் அழிந்துவிட்டன; உற்சவத் திருமேனிகளில் மிக முக்கியமானது சோமாஸ்கந்தர் வடிவம். இங்கு இத்திருமேனி இல்லை. ஆதலால் இக்கோயில் திருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட வில்லை.

## 5.5. திருக்குடமுழுக்கு

இத்திருக்கோயில் கட்டப்பட்டபோது குடமுழுக்கு நடை பெற்றிருக்க வேண்டும். பல குடமுழுக்கு நிகழ்ந்திருந்தாலும்

அவை எப்போது நிகழ்ந்தன என்பதை அறிய முடியவில்லை. பன்னிரண்டு ஆண்டுக்கு ஒரு முறை குடமுழுக்குச் செய்ய வேண்டும் என்பது மரபு. இக்கோயிலில் பலமுறை திருக்குட முழுக்கு நடைபெற்றும் அவை எப்போது நடந்தன என்பது தெரிந்தில.

1951ஆம் ஆண்டு இக்கோயிலில் சில பொருள்கள் திருட்டுப் போயின; அப்போது திருடர்கள் வயிரவரைப் பெயர்த்துக் கீழே படுக்க வைத்துவிட்டு ஓடிவிட்டனர். ஊராரும் நகரத்தாரும் சைவாகம முறைப்படி புண்ணியாவாசனம் செய்து கழுவாய் செய்தனர். அப்போது அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நிகழ்ந்தது. இச்சமயத்தில்தான் வயிரவர் கருவறைக்கு முன்னர் சுதையால் துவாரபாலகர்கள் அமைக்கப்பட்டனர்.

## 5.6. தெய்வ அச்சமும் நம்பிக்கையும்

திருப்பாதாளேச்சுவரரும் வயிரவரும் இங்குள்ள சக்திவாய்ந்த தெய்வங்கள்; இக்கடவுளரின் ஆற்றலுக்கு அஞ்சியே பலரும் கோயிலுக்கு வருவதற்கு அஞ்சுகின்றனர். தலித் இன மக்கள் பல திருக்கோயில்களுக்குள் சென்று வழிபடுகின்றனர். இங்குள்ள வர்கள் இக்கோயிலுக்குள் நுழையவோ இக்கோயில் திருநீற்றைப் பூசிக் கொள்ளவோ துணிவதில்லை. அரசு அதிகாரிகள் அழைத் தும் யாரும் கோயிலில் நுழைய மறுத்து விட்டனர். இத்தகைய அச்சம் ஏற்படுவதற்குக் காரணம், இங்குத் தூர்வாச முனிவர் தவம் புரிகின்றார் என்ற நம்பிக்கையே ஆகும்.

துர்வாசபுரம் பாதாளேசுவரர் திருக்கோயில் பற்றிய சில நம்பிக்கைகள் அவ்வூர் மக்களிடம் இன்றும் நிலவி வருகின்றன.

இக்கோயிலில் தூர்வாச முனிவரிருந்து தவம் புரிவதாக மக்கள் கருதுகின்றனர். இதனால் இவ்வூர் விழாக்களில் வெடிகள் வெடிப் பதில்லை. வெடியோசை, தூர்வாசரின் தவத்தைக் கலைத்துவிடும் என்றும் அவருடைய சீற்றம் தீமை விளைக்கும் என்றும் மக்கள் நம்புகின்றனர். தலைமுறை தலைமுறையாக வந்த இந்த நம்பிக் கையை மீறி வெடி வெடிக்க முயன்ற ஒருவரின் கையிலேயே வெடிவெடித்துக் கை போய்விட்டது. ஆதலின் முனிவர்க்கு அஞ்சி மக்கள் வெடிகளை இங்கு வெடிப்பதில்லை. இன்றும் இந்நிலை தொடருகிறது.

இக்கோயிலிலுள்ள எந்தப் பொருளையும் எவரும் தொடலா காது. குருக்கள் இசைவுடன்தான் பெற்றுக் கொள்ள வேண்டும். நாமே கேட்டுப் பெற்றால் உடலில் வெண்குட்டம் போல வெள்ளை விழுந்துவிடும். புதுக்கோட்டை மன்னர், ஒரு சமயம் இக்கோயிலுக்கு வந்தார். அவர்க்குத் திருநீறு கொடுக்கப்பட்டது. சந்தனம் கொடுப்பதில்லை அதனை அவர் கேட்டு வாங்கி அணிந்து கொண்டார். வழிபாடு முடிந்ததும் திரும்பிச் சென்ற மன்னர் பல்லக்கில் இருந்த கண்ணாடியில் முகத்தைப்

பார்த்தார். தன் நெற்றியில் வெள்ளைத் தழும்பைக் கண்டார். உண்மை உணர்ந்து தழும்பு எவ்விடத்தில் மறைகின்றதோ அச்சிற்றூரை வயிரவர்க்கு விடுவதாக வேண்டிக் கொண்டார். அத்தழும்பு மறைந்த இடமே சந்தன விடுதி. இதனால் வயிரவர் சந்நிதியில் திருநீறு மட்டுமே கொடுக்கப்படுகிறது.

இதுபோல மற்றொரு நிகழ்ச்சியுமுண்டு. குழந்தையொன்று தவழ்ந்து வயிரவர் சந்நிதியிலுள்ள குண்டத்தில் இருந்த சாம்பலை அள்ளியது. அப்படியே கை வயிற்றில் பட்டது. சாம்பல் பட்ட இடம் வெள்ளையாகி விட்டது. அக் குழந்தை இன்று முதியவராக வாழ்கிறார். அது பெரிதாகப் பரவவோ வேறு தீமையோ விளைவிக்கவில்லை. இவையெல்லாம் வயிரவரின் ஆற்றல் என்று கருதி மக்கள் அவருக்கு அஞ்சுகின்றனர்.

## இவ்வியலில் கூறப்பெற்ற கருத்துகள்:

1. திருக்கோயில்களில் மூன்று வகையான கிரியைகள் நிகழுகின்றன. திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலில் தினந்தோறும் நான்கு கால பூசை நடைபெற்று வருகிறது. தொன்று தொட்டு நான்கு கால பூசையே இங்கு நிகழ்கிறது.
2. இக்கோயிலில் காரணாகம மரபே பின்பற்றப்படுகிறது.
3. நான்கு கால பூசையிலும் அபிஷேகம், அலங்காரம், நைவேத்தியம், தீபாராதனை என்பன நடைபெறுகின்றன.
4. சிவன் கோயில்களில் பிரதோஷம், கார்த்திகை போன்ற விழாக்கள் கொண்டாடப்படும். இங்கு மிகச் சிலவே சிறப்பாகக் கொண்டாடப் படுகின்றன.
5. இக்கோயிலில் நிகழும் திருவிழாக்கள் மூன்று. இவை பிரம்மோற்சவம் அல்ல; பக்தோற்சவம்.
6. இங்கு வயிரவர் சம்பாசுரனை அழிக்கும் சம்பாசஷ்டி கொண்டாடப் படுகின்றது.
7. இக்கோயிலுக்குக் கி.பி.1951இல் திருக்குடமுழுக்கு நடைபெற்றிருக் கிறது. நாற்பத்தைந்து ஆண்டுகளுக்குப் பின் இதுகாறும் குடமுழுக்கு நிகழவில்லை.
8. மக்கள் இக்கோயிலிறைவனுக்கும் வயிரவருக்கும் பெரிதும் அஞ்சுகின்றனர்.

## அடிக்குறிப்புகள்

1. கா.கைலாசநாதக் குருக்கள் (1963)- சைவத் திருக்கோவிற் கிரியை நெறி, கலா நிலையம், 175 செட்டியார் தெரு, கொழும்பு, ப.167.
2. மேலது, ப.170
3. மேலது, ப.198

4. பி.ஆர். ஸ்ரீநிவாசன் (1959) நாம் வணங்கும் தெய்வங்கள் இளங்கோ பதிப்பகம், 14- உஸ்மான் ரோடு, சென்னை-17 ப.155

5. டாக்டர் பு.பா. உமாமகேசுவரி (1990) -நெல்லையப்பர் திருக்கோயில், தி.தெ.சைசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18 ப.117

6. ...... (ஆ.இ)- ப்ரதோஷ விளக்கம், வெளியீட்டாளர், எழுதியவர் பெயர் ஒன்றுமில்லை. சிறு வெளியீடு, ப.உ.

7. ஐந்து வகையான பிரதோஷம்- பின்னிணைப்பில் தரப்பட்டிருக்கிறது.

8. கே.ஆறுமுகநாவலர் ( ) இந்து மத இணைப்பு விளக்கம்............................

9. டாக்டர் வ.தேனப்பன் (1990) ஒன்பது நகரக் கோயில்கள், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை, ப.170

10. மேலது, பக்.170-171

11. சோமலெ (1981)- தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா. ப.120

**12. விழாக்களும் வாகனங்களும்.**

| நூல் | பரம புருஷா சம்கிதை | கருட சம்கிதை | சனத்குவிர சம்கிதை | வசிட்ட சம்கிதை | மார்க்கண்டேய சம்கிதை | நாராயண சம்கிதை |
|---|---|---|---|---|---|---|
| 1. | சிவிகை | புஷ்ப பீடம் | சிவிகை | சிம்மம் | அநுமன் | சிவிகை |
| 2. | சிவிகை | ரவி மண்டலம் | அநுமன் | கருடன் | சேஷன் | ஊஞ்சல் |
| 3. | சந்திரப் பிரபை | இந்து பிரபை | சிம்மம் | ரதம் | கஜம் | சேஷன் |
| 4. | சிம்மம் | சிம்மம் | சேஷன் | அசுவம் | கருடன் | கருடன் |
| 5. | சேஷன் | சேஷன் | கருடன் | ஹம்சம் | ரதம் | சிம்மம் |
| 6. | அநுமன் | மயூரம் | கஜம் | ஊஞ்சல் | அசுவம் | அசுவம் |
| 7. | கருடன் | ஹனுமன் | ரதம் | | ஹம்சம் | அநுமன் |
| 8. | கஜம் | கருடன் | அசுவம் | | ஊஞ்சல் | வராகம் |
| 9. | ரதம் | கஜம் | ஹம்சம் | | | வியாக்கிரம் |
| 10. | | ரதம் | ஊஞ்சல் | | | ரதம் |

## பூக்கள் – பூசை – காலம் – பயன்

| நிறம் | பூ | குணம் | காலம் | பயன் |
|---|---|---|---|---|
| 1. வெள்ளை | வெள்ளெருக்கு, வெள்ளை யலரி, பிச்சி, சிறு செண்பகம், மந்தாரை, கொக்கரகு, புன்னை, நந்தியா வர்த்தம், மல்லிகை, முல்லை, தும்பை | சாத்விகம் | சாயரட்சி யாமம் உஷத்காலம் | பேரானந்தம் மோட்சம் |
| 2. சிவப்பு | பாதிரி, செந்தாமரை, பட்டி, செவ்வலரி, செங்கடம்பு | இராஜஸம் | மத்தியானம் | போகம் |
| 3. பொன்னிறம் | கொன்றை, செண்பகம், தங்கரளி, செவ்வந்தி | தாமஸம் | விடியற்காலை | போகம் மோட்சம் |
| 4. பச்சை | வில்வம், துளசி, மரிக் கொழுந்து, அருகு, பச்சை | இராஜஸம் | | அறம், பொருள் இன்பம், வீடு |
| 5. நீல நிறம் | நீலோத்பலம், வேறு நீல நிறமுள்ள பூக்கள் பூசைக்குத் தகுதியற்றவை | | | வசீகரம் மோகம் இன்பம் |

# ஆறாமியல்
# திருக்கோயில் நிருவாகம்

# ஆறாமியல்
# திருக்கோயில் நிருவாகம்

## 6.0. அரசு நிருவாகம்

தண்ணார் தமிழ் வளர்க்கும் பாண்டிய நாட்டின் எல்லையை ஒட்டிய வட்டாரத்தில் திருமாத்திருப்பதாளேச்சுவரர் திருக்கோயில் விளங்குகிறது. இக்கோயில் பாண்டிய மன்னர்கள் ஆட்சியில் உருவானது என்பதை இங்குப் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. இக்கோயிலின் பல்வேறு மண்டப விதானக் கற்களில் பாண்டியர்களின் இலச்சினையான இரட்டை மீன் சின்னம் செதுக்கப்பட்டிருக்கிறது. அவை அழகு படுத்தப்படாமலும் நேருக்கு நேராகவும் உள்ளன. இவற்றால் இக்கோயில் பாண்டியர் கட்டுப்பாட்டுக்குள் இருந்தமை புலனாகும்.

பாண்டிய நாட்டைச் சார்ந்த இந்தப் பகுதியைச் சுற்றியுள்ள ஊர்கள் பல அடங்கிய நிலப் பகுதியைப் ‘பன்றிநாடு’ என்று அழைக்கும் வழக்கம் பிற்காலத்து எழுந்தது. ‘பன்றிநாடு’ செந் தமிழ் நாட்டைச் சூழ்ந்த கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்றாகும். இதனை.

> “தென்பாண்டி குட்டம் குடம்கற்கா வேண்பூழி
> பன்றி அருவா அதன்வடக்கு– நன்றாய
> சீத மலாடு புனல்நாடு செந்தமிழ்சேர்
> ஏதமில் பன்னிருநாட்டு எண்”[1]

என்ற வெண்பா வெளிப்படுத்தும். பன்றி நாட்டுள் அடங்கி யதே திருமா. பன்றி நாட்டுக்கே உரிய பன்றி வீரன் (பன்றி வீரன்) ஆலயமும் வழிபாடும் இவ்வூரில் தொன்று தொட்டு இன்றுவரை சிறந்து விளங்குகின்றது.

பாண்டிய நாடாகவும் பன்றி நாடாகவும் இருந்த திருமா, பதினாறாம் நூற்றாண்டு முதல் திருமெய்யத்தைத் தலைமை யாகக் கொண்டு ஆண்ட அருளாட்சியாளர்களின் கட்டுப்பாட் டுக்குள்ளிருந்தது. திருமெய்யம் கோட்டையும் அதனைச் சார்ந்த பல ஊர்களும் ஒரு குறுநிலத் தலைவன் ஆட்சியின் கீழிருந்தன. அப்பகுதி புதுக்கோட்டை சமஸ்தானத்தோடு இணைந்தபோது, திருமாவும் புதுக்கோட்டை சமஸ்தானத்துக்குரிய ஊராயிற்று.[2]

திருமா, புதுக்கோட்டை சமஸ்தானக் கிராமமாயிற்று. அங்குள்ள திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலும் புதுக்கோட்டை சமஸ்தான நிருவாகமாயிற்று. அது 'தூர்வாசபுரம்' என்று அனைத்து ஆவணங்களிலும் பதிவு செய்தது. புதுக்கோட்டை சமஸ்தானத்தின் திருமெய்யம் தாலுகா தாசில்தார் கண்காணிப்பின் கீழ் இக்கோயில் வந்தது.

இந்தியா கி.பி.1947இல் விடுதலை பெற்றபோது, பல்வேறு சமஸ்தானங்களாகச் சிதறுண்டு கிடந்தவை அனைத்தும் சர்தார் வல்லபாய் படேல் அவர்களின் தளரா முயற்சியால் ஒருங்கிணைக்கப்பட்டன. அப்போது, புதுக்கோட்டை மன்னராக இருந்த ஹிஸ் ஹைனஸ் ஸ்ரீ இராச கோபாலத் தொண்டைமான் அவர்கள் தானே முன் வந்து தன்னுடைய சமஸ்தானத்தைச் சுதந்திர இந்தியாவுடன் இணைத்தார்; சுதேசி மன்னர்களில் சுதந்திர இந்தியாவில் தன்னாட்டை முதற்கண் அளித்து இந்தியாவுடன் இணைத்த பெருமை ஸ்ரீ ராஜகோபாலத் தொண்டைமானவர்களையே சாரும். இதனால், புதுக்கோட்டைச் சமஸ்தான நிருவாகத்தின் கீழிருந்த அனைத்துக் கோயில்களும் இந்திய அரசின் நிருவாகத்துக்குட்பட்டன.

## 6.1. சமஸ்தான நிருவாகம்

புதுக்கோட்டை சமஸ்தானம், தன் நிருவாகத்திலிருந்த கோயில்களுக்கு நித்தியப் படித்தரத்திற்காகத் திங்கள்தோறும் நிதி உதவியது; திருக்கோயில் திருவிழாக்களில் சமஸ்தான மண்டகப் படியாக ஒரு நாளை (ஆறாந் திருநாளை)த் தேர்ந்தெடுத்து அந்த விழாச் செலவையேற்றது. புதுக்கோட்டை சமஸ்தானக் கோயில்கள் எல்லாம், தமிழக அரசின் கைப்பட்டது; இந்து அறநிலையத்துறையின் நிருவாகத்திற்குரியதாயிற்று. இன்று புதுக்கோட்டை மாவட்டம் இந்து அறநிலையத் துறை நிருவாகத்தின் கண்காணிப்பில், நூற்றுப் பதினெட்டுக் கோயில்கள் இருக்கின்றன.

### 6.1.1. கோயில்களை ஒதுக்கிக் கொள்ளாமை

ஆங்கிலேயர் ஆட்சியில் பல சிற்றரசுகளாகச் சிதறுண்டிருந்த ஜமீன்கள், சுதந்திர இந்தியாவில் தங்கள் ஆட்சி உரிமையை விடுத்து இணைய முற்பட்டபோது, தங்கள் நிருவாகத்திலிருந்த திருக்கோயில்களைத் தங்கள் சொந்தப் பொறுப்பிலேயே வைத்துக் கொண்டிருந்தன. இதனால் கோயிலை நிருவகிக்குமுரிமை, கோயில் வருமானங்களைப் பயன்படுத்துமுரிமை, கோயிலில் மாலை மரியாதை பெறும் உரிமை ஆகியன பழைய ஆட்சியாளர்களுக்கே இன்றுவரை உரியதாகிவிட்டது. இராமநாதபுரம், சிவகங்கை ஜமீன்கள் தங்கள் நாட்டெல்லைக்குட்பட்ட கோயில்களைத் தங்கள் நிருவாகத்திலேயே இன்றுவரை வைத்திருக்கின்றன.

முதற்கண் சுதேசி சமஸ்தானத்தை இந்தியப் பேரரசில் இணைத்த புதுக்கோட்டை மன்னர், எல்லாத் திருக்கோயில் களையும் தன்னுடைய அரசுடன் ஒப்புவித்துவிட்டார். எந்தக் கோயிலையும் தன்னுடைய சொந்தக் கட்டுப்பாட்டில் அவர் ஒதுக்கிக் கொள்ளவில்லை. தன்னலம் நாடாத் தகை சான்ற மன்னரின் செயலால் புதுக்கோட்டை சமஸ்தானக் கோயில்கள் எல்லாம் தமிழ்நாடு அறநிலையத் துறை நிருவாகத்தின் கீழ் போந்தது. இன்று புதுக்கோட்டை மாவட்ட அறநிலையத் துறை வழங்குகின்ற படித்தரம், விழாச் செலவு ஆகியன சமஸ்தானம் வழங்கிய தொகையேயாம்; இன்றைய பொருள் நிலைக்கு ஏற்பத் தொகை வழங்கப்படவில்லை.

## 6.1.2. கல்வெட்டும் நிருவாகமும்

இக்கோயிலில் நான்கு கல்வெட்டுகள் இருக்கின்றன. (பு.ச.க.எண்638; 774; 795) இவற்றின் முதலிரண்டு கல்வெட்டும் பாண்டியர் தொடர்பின; பின்னிரண்டும் இக்கோயிலில் திருப்பணி நடைபெற்றதைத் தெரிவிப்பன. இக்கல்வெட்டுகளால், கோயில் நிருவாகம் பற்றிய செய்திகளைப் பற்றித் தெளிவாக ஒன்றும் அறிய இயலவில்லை.

பொதுவாகக் கோயில்கள் எல்லாம், ஊரார் நிருவாகத்திலேயே இருந்தன; ஊராரை அநுசரித்துத் திருக்கோயிலாரும் வாழ்ந்தனர். இதனால் திருக்கோயில் நிருவாகத்தில் எவ்வகைச் சிக்கலும் தோன்றவில்லை. இத் திருக்கோயில் நிருவாகம், தொன்றுதொட்டு ஊராராலும் கோயில் பணியாளர்களாலும் செவ்வனே நடைபெற்று வருகிறது.

## 6.2. செம்மையான நடைமுறை

கி.பி.1817ஆம் ஆண்டில் பிரிட்டிஷார் மத நிவந்தங்களையும் தரும நிவந்தங்களையும் வருவாய்த் துறையினரால் நிருவகிப்ப தற்குச் சட்டம் கொண்டு வந்தனர். இதனை கி.பி.1817ஆம் ஆண்டில் ஏழாம் தொகுதியில் காண முடியும். இதன் மூலம் ஆங்காங்கேயுள்ள வட்டாட்சியரே (தாசில்தார்) கோயில்களைக் கண்காணித்து நிருவகித்தனர்; திருக்கோயில் நகைகளும் கவசங்களும் எல்லாம் வட்டாட்சியர் கருவூலத்திலேயே காப்பாக வைக்கப் பட்டிருந்தன; இன்றுகூட, அப்பழைய மரபிலேயே, அனைத்தும் திருமயம் (திருமெய்யம்) அரசு கருவூலத்திலேயே உள்ளன. இந்து, இசுலாம் நிவந்தங்களில் கிறித்துவ அரசியலார் தலையிடுவது அடுக்காது என்று கிறித்தவப் பாதிரிமார் கிளர்ச்சி செய்தமையால் இந்த நடைமுறை கி.பி.1842இல் ஆங்கிலேயர் கண்காணித்து வந்ததை விட்டுவிட்டனர். ஆனால் புதுக் கோட்டை சமஸ்தானம், தொடர்ந்து திருக்கோயில்களை வருவாய்த்துறைப் பொறுப்பில் கண்காணித்துக் கட்டுப்படுத்தி

வந்தது. இதனால், புதுக்கோட்டைச் சமஸ்தானக் கோயில்களில், நெறியான ஒழுங்குமுறையும் வேதாகம மரபும் வழுவாமல் பின்பற்றப்பட்டன.

## 6.3. இருவகை நிருவாக முறைகள்

திருக்கோயில் நிருவாக முறைகள் இரண்டு வகையின.[3]

1. திருக்கோயில் மன்னர்கள் கட்ட, ஊரார் அக்கோயிலை நிருவகிப்பர். ஊரார் ஒருங்குகூடி நிருவாகக் குழுவைத் தேர்ந்தெடுத்தோ ஊர்ச் சபை மூலமோ இந்நிருவாகம் நடைபெறும். தனிப்பட்டவர்கள் திருக்கோயில் கட்டிக் கும்பிடுவதும் அவர்கள் நிருவகிப்பதும் இதனுள்ளேயே அடக்கிக் கொள்ள வேண்டும்.

2. திருக்கோயிலில் பணிபுரியும் பணியாளர்களே கோயிலை நிருவகிப்பது ஒரு முறை; முழுக்கமுழுக்கக் கோயிலாரே கோயிலைக் கண்ணும் கருத்துமாக நிருவகிக்கின்றனர். தில்லை மூவாயிரவர், சிதம்பரம் ஸ்ரீ நடராசர் திருக்கோயிலை நிருவகிப்பது இங்குக் கருதற்பாலது.

கோயிலை நிருவகிப்பது யாராயினும், அவர்கள் ஆட்சியாளர் களுக்குக் கட்டுப்பட்டே கோயிலை நிருவகிக்க வேண்டும்.

### 6.3.1. அறநிலையத்துறை நிருவாகம்

திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில், சிறப்பும் பெருமையுமுடையதாக இருப்பினும் இக்கோயிலுக்குச் சொத்துக் களோ நிலங்களோ கிடையாது. இக் கோயிலுக்கு வருவாய் தருகின்ற நிலபுலன்களோ கடைகளோ வீடுகளோ இல்லை. அடுத்து, இக்கோயிலை நாள்தோறும் வந்து வணங்குகின்ற மக்கள் எண்ணிக்கை குறைவு; கோயிலைத் தழுவி வாழுகின்ற குடிகள் அனைவரும் நாளெல்லாம் உழைக்கின்ற பாட்டாளி மக்களே; அவர்கள் உழைப்பும் ஓய்வுமாகவே வாழுகின்றனர்; நாள்தோறும் வழிபட வேண்டும் என்ற எண்ணம் அவர்கள் பாலில்லை. இவற்றால், இக்கோயில் நிருவாகத்தில் ஊரார் அக்கறை காட்ட வில்லை; கோயில் பணியாளர்களே, தங்கள் மரபு வழியான அதிகார வரம்பை உணர்ந்து கடமை தவறாது செவ்வனே பணி களைச் செய்து கோயிலை நிருவகித்து வருகின்றனர். ஆதலால், இக்கோயில் திருக்கோயில் பணியாளர்களின் பொறுப்பிலேயே விளங்குகிறது. அறநிலையத்துறையும் கோயில் நடைமுறையைக் கண்காணித்து வருகின்றது. அதனால், இக்கோயில் புதுக் கோட்டை மாவட்ட அறநிலையத் துறை நிருவாகத்திற்குட்பட்ட தாகும்.

#### 6.3.1.1. அறங்காவலர்

திருக்கோயில்களையும் நிவந்தங்களையும் கட்டளைகளையும் நிருவகித்து வருபவர் அறங்காவலர் (தருமகர்த்தா) எனப்படுவார்.

*இவர்களுக்கு அறக்கட்டளைகளிலோ அதன் வருவாயிலோ உரிமை இல்லை. அவர்கள் அதனை நிருவகிக்கும் உரிமை மட்டுமேயுடையவர். அறங்காவலர் பதவி வழிவழி உரிமையாகவோ குறிப்பிட்ட காலத்துக்கு நியமனம் செய்யப் பெற்றோ கிட்டும். இதனைப்*

*1. பரம்பரை அறங்காவலர்*
*2. நியமன அறங்காவலர்.*

*என்று பெயரிட்டழைப்பர். நியமன அறங்காவலர் ஆளும் அரசால் நியமிக்கப்படுவர். இங்குப் பரம்பரை அறங்காவலர் எவருமிலர்; நியமன அறங்காவலர்.*

*இத்திருக்கோயிலில் பன்னிருவர் திருக்கோயில் திருத் தொண்டு செய்பவர்களாகத் திகழ்கின்றனர். சிவாச்சாரியார் என்ற குருக்கள், அத்தியானப்பட்டர், சுயம்பாகம், பரிசாரகர், மேளம், நட்டுவாங்கம், மாலைகட்டி, வயிராவி, மெய்காவல், உதவிக் காவல் என்ற பதின்மர் குறிக்கத் தக்கோராவர்.*

## பணியாளரும் ஊதியமும்

| எண் | பணி | பெயர் | ஊதியம் /சம்பளம் |
|---|---|---|---|
| 1. | சிவாச்சாரியார் என்ற குருக்கள் | சித.சுப்பிரமணியம் | ரூ. 130/- |
| 2. | அத்தியானப்பட்டனர் | தி.சுப்பிரமணியம் | ரூ. 25/- |
| 3. | சுயம்பாகம் | கே.ரமேசு | ரூ. 165/- |
| 4. | பரிசாரகர் | கே.ரமேசு | ரூ. 25/- |
| 5. | மேளம் | 1. சுப.கருப்பையா | ரூ. 90/- |
| | | 2. க.சிந்தாமணி | ரூ. 90/- |
| | | 3. தி.தியாகராஜன் | ரூ. 90/- |
| | | 4. சுப.ராஜலட்சுமி | ரூ. 90/- |
| 6. | மாலைகட்டி | கே.சுப்பிரமணியன் | ரூ. 100/- |
| 7. | வயிராவி | பழ.காளியப்பன் | ரூ. 90/- |
| 8. | மெய்காவல் | சி.பழனியப்பன் | ரூ. 120/- |
| 9. | உதவிக்காவல் | பழ.இலட்சுமணன் | ரூ. 110/- |
| 10. | திருநீறுபோடுபவர் | வ.கண்ணப்பன் | ரூ. 90/- |
| 11. | நட்டுவாங்கம் | சுப.பழநிச்சாமி | ரூ. 90/- |
| 12. | விறகு போடுபவர் | பெரி.வயிரவன் | ரூ. 100/- |

### 6.4.1. சிவாச்சாரியாரும் அத்தியானப்பட்டரும்

*திருக்கோயிலில் வேதாகம முறைகளைப் பின்பற்றிச் சிவபெருமானைக் கொண்டாடித் தெய்வ சாந்நியத்தை நிலைநாட்டுபவர் சிவாச்சாரியாரே; இவரை மக்கள் 'குருக்கள்' என்று போற்றுவர். வேதங்களையும் ஆகமங்களையும் கற்று இவர் திருக்கோயில் பூசை செய்கிறார். இங்கு சிவஸ்ரீ சித.சுப்பிரமணியம் அவர்கள்*

சிவாச்சாரியாராகத் திகழ்கிறார். திருப்பாதாளேச்சுவரரிடமும் வயிரவரமூர்த்தியிடமும் பயபக்தியுடன் கரும சிரத்தையாக இவர் திருத்தொண்டு புரிகின்றார். இவர் பரம்பரையினரே இங்குத் தொன்று தொட்டுப் பூசை செய்து வருகின்றனர்.

அத்தியானப்பட்டர் என்பவர் திருக்கோயிலில் வேதம் ஓதுகின்றவர் ஆவார். "அத்தியானம் வேதமோதுகை" என்பது தமிழ் லெக்சிகன் கூறும் விளக்கம்.[4] திருக்கோயிலில் வேதம் ஓதவும் அருச்சனைக்குரிய மந்திரத்தைச் சொல்லவும் தனியே ஒரு பட்டர் இருப்பார்; அவரே அத்தியானப்பட்டர். சிவன் கோயிலில் அருச்சனை சொல்லுவதற்கு என்று தனியே அத்தி யானப்பட்டரும், அவ்வாறு அவர் அருச்சனை சொல்லும்போது மலரிட சிவாச்சாரியாரும் இருப்பர். இவ்வாறு இருவர் தேவைப் படுவது ஏன்? சிவபெருமான் திருமுன் நின்று மந்திரங்களை உச்சரித்துக் கொண்டு சிவாச்சாரியார் மலரிடும்போது, அவ ருடைய வாய் எச்சில் சிவமூர்த்தத்தின் மேல்பட வாய்ப்புண்டு. அவ்வாறு எச்சில் விழுவது உகந்ததன்று. எனவேதான் சிவன் கோயில்களில் சிவாச்சாரியார், அத்தியானப்பட்டர் என்று இருவர் தனித்தனியே நியமிக்கப்பட்டனர்.[5] ஆனால் இன்று இக்கோயிலில் இரண்டு பணிகளையும் ஒருவரே செய்கின்றார். வருமானம் குறைவாக இருப்பதே இதற்குக் காரணமாகும்.

### 6.4.2. சுயம்பாகமும் பரிசாரகமும்

தானாகச் சமைத்துக் கொள்வதைச் சுயம்பாகம் என்பர். திருக்கோயில் மடைப்பள்ளியில் இறைவனுக்குத் தேவையான நைவேத்தியங்களை ஆக்கும் பணியாளர்களுக்குச் 'சுயம்பாகி' என்று பெயர். இச் சொல் திரிந்து சோம்பாகி என்றும் சோம்பாயி என்றும் வழங்கும். ஒரு குடும்பத் தலைவி தன் மனையில் வேண்டியவர்க்கு உணவாக்குதல் போலச் சுயம்பாகியும் திருக்கோயிலில் மடைப்பள்ளியில் தேவையானவற்றையெல்லாம் ஆக்கிடுவார். சுவையானவையாகவும் தூய்மையானவையாகவும் நைவேத்தியங்களை ஆக்கச் 'சுயம்பாகி' திருக்கோயிலுக்கு இன்றியமையாதவர்.

இவரைப் போலத் திருக்கோயில் பணியில் முக்கியமானவர் பரிசாரகம் செய்பவர். இவர் சிவாச்சாரியார் சுயம்பாகி இருவர் ஏவும் பணிகளைச் செய்து கொடுப்பவர். கடவுளர் அபிஷேகத் துக்குத் தேவையான தீர்த்தத்தைத் திரட்டி வருதல், சந்நிதிகளில் தீபமிடல், சந்தனம் அரைத்துக் கொடுத்தல், பரிவட்டங்களை நாள்தோறும் துவைத்தல் ஆகியன இவர் கடமை. சந்நிதிகள் மி குதியாக உள்ள கோயில்களில் சுயம்பாகி, பரிசாரகர் பலர் இருப்பர். இங்கு இரண்டு பணிகளையும் கே. ரமேஷ் என்று ஒருவரே செய்து வருகின்றார்.

### 6.4.3. மாலை கட்டி

இறைவனுக்கு அழகூட்டி அருள்தரும் தோற்றத்தை நல்குவன மலர் மாலைகள்; மலர் மாலைகளும் பச்சிலைகளும் கொண்டு கடவுளை வணங்கிப் பணிவது மக்கள் இயல்பு. திருநாவுக்கரசர் 'சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்' என்று கூறுவதனால் பூசையில் மலர் பெற்றிருந்த இடத்தை அறிய முடிகின்றது. புள்ளிருக்கும் வேளூர்ச் சிவபெருமானுக்குச் சம்பாதி நெடுந்தூரம் சென்று மலர் கொண்டு வந்து இட்டு வணங்கினான் என்று திருஞானசம்பந்தர் பாடுகின்றார்.

"யோசனை போய்ப்பூக் கொணர்ந்துஅங் கொருநாளும் ஒழியாமே
பூசனை செய்துஇனி திருந்தான் புள்ளிருக்கு வேளூரே"[6]

என்பது தேவாரப் பகுதி. இவ்வாறு பூத்தூவி வழிபடுதலா லேயே 'பூசை' என்ற சொல் அமைந்தது.

பூசெய் பூசை

என்றாயிற்று என்பர் அறிஞர் தனிநாயக அடிகளார்.[7] எனவே திருக்கோயிலில் பூக்களைத் திரட்டி அருச்சனைக்குக் கொடுப்ப தும் மாலை கட்டி இறைவனுக்கு அணிவிப்பதும் தெய்வத் தொண்டுகளாகும். இதற்கெனவே கோயிலைச் சார்ந்து நந்தவனங்கள் இருந்தன. கோயிலின் பிரகாரத் தென்கிழக்கு மூலையில் நந்தவனம் இருத்தல் வேண்டும் என்று காக்கையர் சிற்பம் செப்புகிறது.[8]

திருக்கோயில் நந்தவனங்களில் பூக்களை எடுத்துத் தொடுத்துக் கோயிலுக்கு வழங்கும் பணியில் ஓதுவார், தேசிகர், பண்டாரம், சைவப் பிள்ளைமார் போன்ற இனத்தினர் ஈடுபட்டனர். திருமாத் திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலைச் சார்ந்தது நந்தவனம் இருந்ததாகத் தெரியவில்லை. கடவுளர்க்குத் தேவை யான மாலைகளையும் அருச்சனைக்குரிய பத்திரங்களையும் (இவர்கள்) கொண்டுவந்து தரவேண்டியது மாலைகட்டியின் தலையாய கடமையாகும்.

'மாலை கட்டி' என்பவர் திருக்கோயிலாகம மரபுகளையும் பூசை மரபுகளையும் உணர்ந்தவராவர். அவர் எந்தக் கடவுளுக்கு என்ன மலர் கொண்டு அருச்சனை செய்ய வேண்டும் என்பதையும் எந்தப் பூசை நேரத்தில் என்ன பூவால் அருச்சிக்க வேண்டும் என்பதையும் உணர்ந்தவாராவர்.[9]

### 6.4.4. மெய்காவல்

திருக்கோயிலுக்கு ஆபத்து நேராமல் காப்பவன் 'மெய்க்காவல்' எனப்படுவான்; இவனை மெய்காவலன் என்பர். மெய்க் காவலரைத் தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுக்களில்

மெய்காப்பு என்று பெயர் கூறப்பட்டுள்ளது. திருக்கோயிலைத் திறப்பதும் அனைத்துப் பொருள்களையும் காப்பதும் இவர் கடமையாகும். இவர் திருக்கோயில் தீர்த்தக் கிணற்றை மேலும் ஆழமாக்கும் போது சிவகாமியம்மை- நடராசர் செப்புத் திருமேனிகளைக் கண்டுபிடித்தார்.

மெய்காவலும் உதவிக் காவலும் இக்கோயிலைக் கண்ணை இமை காப்பது போலக் காத்து வருகின்றனர். திரு.சி.பழநியப்பன், திரு.பழ.இலட்சுமணன் இருவரும் தங்கள் பணியைக் குன்றாது செய்து வருகின்றனர்.

## 6.4.5. திருநீறும் எரிதுரும்பும்

திருநீறு ஆகிய விபூதியும் உருத்திராக்கமும் சிவசின்னம் என்றும் திருவேடம் என்றும் போற்றப்பெறும். "திருவெண்ணீறு அணியாத திருவிலூரும்- அவையெல்லாம் ஊரல்ல அடவி காடே" என்று தமிழ் வேதம் சாற்றுகின்றது. மாணிக்கவாசகர்.

"பிணி எலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன் துணி நிலா அணியினான்தன் தொழும்பரோடு அழுந்தியம்மால் திணிநிலம் பிளந்துங் காணாச் சேவடி பரவி வெண்ணீறு அணிகிலாத வரைக்கண் டால்அம்ம நாமஞ் சுமாறே"[10]

என்று திருநீறணிதலை வலியுறுத்துவர். சைவ சமயத்தின் சின்னம் திருநீறு அணிதல். அதனால் சிவன் கோயில்களில் மெய்யடியார்களுக்குத் திருநீறு வழங்கப் பெறும். இதற்குத் தேவையான திருநீற்றை ஆக்கித் தருபவர் திருநீறு போடுபவராவர். ஆகமங்களில் கூறிய வண்ணம் திருநீற்றைத் தயாரிப்பது இவர் கடமை. திரு.வ.கண்ணப்பன் இப்பணியை இங்கு மேற்கொண் டிருக்கிறார்.

திருக்கோயிலுக்கு இன்றியமையாத இன்னொரு பொருள், மடைப்பள்ளிக்குத் தேவையான விறகு. இந்த விறகைக் கொண்டு வந்து தரவேண்டியவரே விறகு போடுபவர். இவர் கோயிலைச் சுற்றியும் புறம்போக்குகளிலும் உள்ள ஒடிந்த மரங்களை வெட்டிக் கோயிலுக்கு வேண்டிய விறகைக் கொடுப்பார். இப்பணியைத் திரு.பெரி. வயிரவன் செய்து வருகிறார்.

## 6.4.6. வயிராவி

திருக்கோயில் பணியாளர்களில் வயிராவி ஒருவர். இவர்களைப் பற்றி அபிதான சிந்தாமணி பின்வருமாறு விளக்கம் தருகிறது.

"ஒரு பண்டார சாதி வகுப்பார். இவர்கள் கோவில்களில் பூசாரி வேலை செய்பவர்கள். இவர்கள் மேளக்காரர் வகையில் சேர்ந்தவர்கள். இவர்கள் மதுரையில் உள்ளவர்கள் இவர்கள் நாட்டுக்கோட்டைச் செட்டியாரிடம் உத்யோகம் செய்வர்"[11]

ஆனால் இத்திருக்கோயிலில் பணிபுரியும் வயிராவி திரு.பழ.காளியப்பன் பண்டார மரபினரல்லர். இவருக்குத் திருவிழாக் காலங்களில் இறைவனுடன் போதல், தீவட்டி பிடித்தல், குடைபிடித்தல் போன்ற பணிகள் உரியன.

## 6.4.7.இசையும் நடனமும்

திருக்கோயிலில் இசைக்குத் தனியிடம் உண்டு. திருக்கோயில் சிறப்பு நிகழ்ச்சிகள் எல்லாவற்றிலும் பேரிகைக்குத் தனி முதன்மை உண்டு. இங்கு மேளம், நாதசுரம் வாசிக்க நால்வர் உள்ளனர். இவர்கள் இங்குப் பரம்பரையாகச் சேவை செய்து வருகின்றனர். இதற்கென இவர்கள் நில மானியம் பெற்றிருந் தனர். இப்போது இது இவர்களுக்கே உரியதாகிவிட்டது.

இங்குத் தேவதாசிகள் குடும்பம் இருந்ததாகத் தெரிகின்றது. இவர்கள் திருக்கோயிலில் சதுராடிய விவரம் தெரியவில்லை. இங்கிருந்த தேவதாசியர் குடும்பம் அனைத்தும் வெளியூர்க்குச் சென்று நன்னிலையில் வாழ்கின்றனர். தங்கள் குடும்பங்களில் சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும்போது, இங்கு வந்து வயிரவரை வழிபட்டுச் செல்லுகின்றனர்.

## 6.5. ஆவணங்களும் பதிவேடுகளும்

இக்கோயிலில் உண்டியலோ நிருவாக அலுவலகமோ அருச்சனைச் சீட்டோ கிடையாது. சொத்துப் பதிவேடு, திட்டப் பதிவேடு போன்ற பதிவேடுகளும் ஈண்டில்லை.

## 6.6. வரவும் செலவும்

திருக்கோயிலுக்கென்று வருவாய் தரும் சொத்துக்களோ நிலங்களோ கிடையாது. கோயிலைக் கொண்டாடுகின்ற மக்கள் வழங்கும் பொருள்களே, கோயிலை நடாத்தி வருகின்றது. திருக்கோயில் நித்திய பூசைக்கு நித்தியம் ரூபாய் இரண்டு மேனி மாதத்திற்கு ரூபாய் அறுபது இந்து அறநிலையத்துறை கொடுக்கிறது. படித்தரமாக மாதம் ஒன்றுக்கு மூன்று கிலோ அரிசியும் அரை லிட்டர் எண்ணெய்யும் தரப்படுகிறது. ரூபாய் அறுபதுக்கான படித்தரத்திற்குரிய பொருள்களை, புதுக்கோட்டை யில் உள்ள, பி.சி. அர்பன் கூட்டுவுக் கடையில் ஒவ்வொரு மாதமும் இருபத்தேழாம் தேதி முதல் முப்பதாம் தேதிக்குள் சென்று பெற்றுக் கொள்ள வேண்டும். மிகக் குறைந்த அளவில் கொடுக்கப்பெறும் பொருள்களே, திருக்கோயில் கடவுளர்களுக் குரிய நைவேத்தியமாகின்றது.

திருக்கோயிலுக்கு மின்னிணைப்புத் தரப்பட்டிருக்கிறது. இதற்குரிய தொகையையும் இந்து அறநிலையத்துறையே செலுத்துகின்றது.

## 6.6.1. திருவிழாச் செலவு

இக்கோயிலில் நிகழும் திருவிழாவிற்கு என்று தனியே தொகையைப் புதுக்கோட்டைத் திருக்கோயில்கள் என்ற அமைப்பு வழங்குகின்றது. ஆனித் திருமஞ்சனத்திற்கு ரூபாய் 85; படித்தரத்திற்கு ரூபாய் 55; விழாக்காலப் பணியாளர்களுக்கு ரூபாய் 35; பத்தாம் நாள் ஊழியஞ் செய்தவர்களுக்கு நூற்றைம்பது பட்டைச் சாதம் போட்டுக் கொடுக்க வேண்டும். சம்பா சஷ்டிக்கு ரூபாய் 45 கொடுக்கப் படுகின்றது. தேரோட்டத்தன்று காளாஞ்சி யாக முப்பத்தாறு தேங்காய்கள் வழங்கப்பட வேண்டும்.

பொருள்கள் விலை ஏறியிருக்கும் இந்நாளில், புதுக்கோட்டை சமஸ்தானம் வழங்கிய தொகையையே இன்றும் அரசு அளித்து வருகிறது. கோயிலுக்குச் செலவு செய்வார் எவருமின்மையால், திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் திருவிழாக்கள் ஆடம்பரமி ன்றி நடந்து வருகின்றன. எல்லா விழாக்களையும் தவறாது திருக்கோயில் பணியாளர்களே நிருவகித்து நடத்தி வருகின்றனர்.

தமிழகத்தில் செல்வமும் சொத்தும் இல்லாத திருக்கோயில் களைச் சிறப்புற நடத்தவோ கொண்டாடவோ யாரும் முன் வருவதில்லை. ஆனால் அத்தகைய கோயில்களைக் கோயிற் பணியாளர்களே, இறைவன் இறைவியர் திருவருளால் வேதாகம மரபு குன்றாமல்- சட்டத்துக்கு முரணின்றிக் கொண்டாடி நிருவகித்து வருகின்றனர்.

புதுக்கோட்டை சமஸ்தானக் கோயில்களின் செலவுகளுக்கு என்ற புதுக்கோட்டையில் ஒரு தனி அமைப்பைத் தமிழக அரசு அமைத்திருக்கிறது. அந்த அமைப்பில் இருந்தே புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சார்ந்த கோயில்களுக்குரிய செலவுகளுக்கான தொகைகள் வழங்கப்படுகின்றன.

## இவ்வியலில் கூறப்பெற்ற கருத்துகள்

1. பாண்டிய நாடு- பன்றி நாடு- திருமெய்யம் கோட்டை என்று பல ஆட்சியாளர் கண்காணிப்பிலிருந்த திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் பின்னர் புதுக்கோட்டை சமஸ்தானக் கோயிலாயிற்று.
2. புதுக்கோட்டை சமஸ்தானம், விடுதலை பெற்ற இந்தியாவுடன் இணையவே, இங்குள்ள கோயில்களும் இந்து அறநிலையத்துறையின் நிருவாகத்திற்குள் வந்தன. இதனால் இன்று திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில் இந்து அறநிலையத்துறையின் கீழ் விளங்குகிறது.
3. இக்கோயிலுக்கு வருமானம், சொத்து குறைவாதலின் நிருவாக அதிகாரி இல்லை. பல கோயிலுக்கும் சேர்ந்த ஒரு கண்காணிப்பாளரே உள்ளார்.
4. இங்குப் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளால் கோயில் நிருவாகம் பற்றி ஒன்றும் அறியமுடியவில்லை.

5. திருக்கோயில் வருவாய்த்துறையின் பொறுப்பில் இருந்தது. இப்போது அறநிலையத்துறையே நிருவகிக்கிறது.
6. இங்குப் பன்னிருவர், திருக்கோயிலில் பணிபுரிகின்றனர்; இவர்கள் பரம்பரையாக உள்ளவர்கள்; மன்னர்பால் நில மானியம் பெற்றிருந்தாலும் இன்று சன்மானமாக மாதம்தோறும் ஒரு தொகை பெறுகின்றனர்.
7. இன்று சிவாச்சாரியாரும் அத்தியானப்பட்டரும் ஒருவரே; ஒரு காலத்தில் இருவர் இங்குப் பணிபுரிந்தனர். இவர்களைப் போலத் திருக்கோயில் பணிபுரியப் பல்வேறு பணியாளர்கள் உள்ளனர்.
8. திருக்கோயிலில் நாதசுர கோஷ்டி இன்றும் இருக்கிறது. தேவதாசியர் இவ்வூரில் வாழ்ந்திருக்கின்றனர்; இங்கு அவர்கள் சதிராடியதாகத் தெரியவில்லை.
9. திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயிலுக்கு வருமானம் குறைவே; அதனால் நித்தியப் படித்தரம், திருவிழாச் செவுகளுக்கு இந்து அறநிலையமே நிதி உதவி வருகின்றது.

## சான்றாதாரங்கள்

1. தி.வே.கோபாலையர் (பதி.1971) இலக்கண விளக்கம்- சொல்லதிகாரம் சரஸ்வதி மகால், தஞ்சாவூர், ப.57
2. திருமெய்யம் கோட்டை, சிவந்தெழுந்த பல்லவராயனுக்குரியது என்றும் அவனை மெல்ல இராமநாதபுரம் சேதுபதிக்குப் புதுக்கோட்டைத் தொண்டைமானார் துணைநின்றால், பல்லாராயரிறப்புக்குப் பின் திருமெய்யம் வட்டாரம் புதுக்கோட்டை அரசுக்குச் சொந்தமாயிற்று என்றும் கருதுகின்றனர்.
3. திருக்கோயில் நிருவாக முறைகள் தனியே ஆராய்தற்குரியன. ஆதீன நிருவாகம் இதில் ஒரு வகை.
4. ........(1982) தமிழ் லெக்சிகன், முதல் தொகுதி, சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை, மறுபதிப்பு. ப.68
5. செட்டிநாட்டுச் சிவன் கோயில்கள் அனைத்திலும் குருக்கள், • அத்தியானப்பட்டர் என்று இருவர் இருப்பர். சிவாச்சாரியார் வேதமும் ஆகமமும் அறிந்திருப்பார்; அத்தியானப்பட்டர் வேதம் மட்டுமே வல்லவராய் இருப்பர்; இவருக்குப் பூசை செய்து தீபாரதனை செய்யும் உரிமை இல்லை.
6. டி.சி. மீனாட்சி சுந்தரம் (பதி.1996) தையல் நாயகி மாலை, பி.அழகாபுரி ப.27 பாடல் எண் 3, அடி எண் 3-4
7. இக்கருத்தை, நெறியாளர் தம் நினைவிலிருந்து தெரிவித்தார். ஒருவேளை 'தமிழ்த்தூது' என்ற நூலில் இருக்கும் என்று குறிப்பிட்டார்.
8. புசுண்டமகரிஷி (ஆ.இ) காக்கையர் சிற்பம் சண்முகானந்தா புக் டிப்போ, சென்னை- 112, ப.22
9. பூக்கள் பற்றிய பிற செய்திகள், பின்னிணைப்பில் தரப்பட்டிருக்கின்றன.
10. தி.க.கந்தையாபிள்ளை (1941) சைவசமய சார சங்கிரகம், மலாயன் அச்சுக்கூடம், கோலாலம்பூர், ப.64
11. ஆ.சிங்காரவேலு முதலியார் (1981) அபிதான சிந்தாமணி ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ், நியூடெல்லி, ப.1528

# ஏழாமியல்

# முடிவுரை

7.1 பாண்டியர்

7.2. தமிழ்ப் புலவர் வாழ்ந்த மண்

7.3. நிலம் கைமாறல்

# ஏழாமியல்

# முடிவுரை

## 7.1. பாண்டியர் கலை

திருமாத்திருப்பாதாளேச்சுவரர் திருக்கோயில், பாண்டியர் காலக் கோயிலாகப் பாண்டியர் கலை மரபைப் பின்பற்றி விளங்குகிறது. பின்வருவனவற்றைப் பாண்டியர் மரபு என்று கொள்வது பொருந்தும்.

1. கோயில் அடித்தளம், தரைமட்டத்தைவிடக் குறைவான உயரமே உயர்த்திக் கட்டப்பட்டிருப்பது.
2. சிவபெருமான் (அம்மை, வயிரவர்) கருவறையன்றிப் பிறவற்றில் விமானம் இன்மை.
3. சிவபெருமான் கருவறை விமானத்தில் தட்சிணாமூர்த்தி திருவுருவம், விமானக் கூட்டுக்குள் அமைக்கப்பட்டிருப்பது. கண்ணனூர் பாலசுப்பிரமணியர் கோயில் விமானத்தில், கட்டுக்குக் கீழே உள்ள (விமான) தேவகோட்டத்தில் தெய்வ உருவம் இருக்கிறது.
4. பரிவார தேவதைகளுக்குரிய கருவறைகள், மூலஸ்தானத்தொடு இணைக்கப் படாது தனியாக அமைந்திருத்தல்.
5. திருக்கோயில் கருவறை நிலையில், இலக்குமி வடிக்கப்படாமை; நிலையில் மகர தோரணம் செதுக்கப்பட்டிருத்தல்.
6. இராஜகோபுரமின்மை (திருக்கோயில் சுற்றுமதில் பிற்காலத்தியதாகல் வேண்டும்)
7. சிவலிங்கத்துக்குரிய ஆவுடையார் சதுர வடவினதாக அமைதல்.
8. அம்மை இரண்டு கைகளுடன் மட்டும் விளங்குதல்.
9. திருக்கோயிலில் ஒன்றை நோக்கி ஒன்று அமைய இரட்டை மீன் இலச்சினை காணப்படுதல்.
10. திருக்கோயிலில் தூண்களிலோ மண்டபங்களிலோ சிற்பங்கள் எவையும் இன்மை. சுப்பிரமணியர் சந்நிதித் தூணில் மட்டும் ஒருவர் சுப்பிரமணியரை வணங்குமாறு. சதாசேவைச் சிற்பம் அமைக்கப் பட்டிருக்கிறது. அந்த வடிவம் மாதை தனபாலன் வடிவமாகும்.

## 7.2. நிலம் கைமாறல்

இங்கு வாழ்ந்த புலவர் மரபினருக்குத் திருமாவயல் புலவர் முற்றூட்டாகக் கொடுக்கப்பட்டிருந்தது. புலவர் குடும்பமே இதனை அனுபவித்து வந்தது. இக்குடும்பத்திற்கு எதற்காக எக்காலத்தில் யாரால் கொடை செய்யப்பட்டது என்று தெரிய வில்லை. புதுக்கோட்டை சமஸ்தான ஆட்சியில் இந்நிலத்திற்குக் கால் ரூபாய் (25 பைசா) வரி செலுத்த வேண்டியதிருந்ததாம். புலவர் குடும்பத்தைச் சார்ந்த மூதாட்டி உரிய காலத்தில் அத் தொகையைச் செலுத்தவில்லை. எனவே அன்றைக்குத் திவானாக விளங்கிய சேஷய்யா சாஸ்திரி, நிலத்தைக் கைப்பற்றி ஏலத்துக்கு விட்டு விட்டார். அம்மூதாட்டி மீண்டும் முறையீடு செய்தபோது, திவான்.

"வறுத்த கொள்ளு முளைக்காது
வத்திராயிருப்புச் செய்த கிராமம் திரும்பாது"

என்று குறிப்பெழுதி மனுவைத் தள்ளுபடி செய்துவிட்டார். புலவர் பூமியாக இருந்த நிலங்களைப் பில்லமங்கலம் அழகாபுரியைச் சேர்ந்த நாட்டுக்கோட்டைச் செட்டியார் மரபைச் சார்ந்த திரு.தெ. கிருஷ்ணப்ப செட்டியார் அரசு ஏலத்தில் எடுத்து உழவு செய்து வந்தார். ஏறத்தாழ நூற்றைம்பது ஆண்டுகள் அவர்கள் உடைமையாகவே இப்பகுதி விளங்கியது. அவரும் அவருடைய குடும்பத்தார்களும் இக்கோயிலை நன்கு கொண்டாடினார். அக்குடும்பத்தார்க்கு இக் கோயில் இறைவனும் இறைவியும் வயிரவரும் கண்கண்ட கடவுளராய்க் கை கொடுத்து அருள் புரிந்து வருகின்றனர். இப்போது இக்குடும் பத்தாரும் நிலங்களை விற்பனை செய்துவிட்டனர்.

திருமாவில் வாழ்ந்த புலவர்களின் தமிழ்ப் பணியை அறியப் போதிய சான்றுகளில்லை. சொ.வேலுச்சாமிக் கவிராயர் என்ற ஒருவரே அறியப் பெறுகின்றார். இக்குடும்பத்தார், செவ்வூர், பூலாங்குறிச்சி போன்ற ஊர்களுக்குப் போய்விட்டமையால் இவர்களைப் பற்றியே அறிய முடியவில்லை. சுப்பிரமணியர் கோயில் திருப்பணி பற்றிக் கூறும் விருத்தப் பாடல், இப்புலவர் பரம்பரையினர் எழுதியதேயாகும். இது காலந்தோறும் புலவர் தொடர்பு இக்கோயிலுக்கு இருந்ததைக் காட்டுகிறது. சென்னை ஓரியண்டல் மானுஸ்கிரிப்படு லைப்ரரி வெளியிட்ட தனிப் பாலடல் திரட்டில், இராங்கியம், மிதிலைப்பட்டி வட்டாரத்தில் திரட்டிய ஓலைச் சுவடிகளிலிருந்து பாடல்கள் பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன. அப்பகுதியிலுள்ள பின்வரும் பாடல், திருமாத் திருப்பாதாளேச்சுவரரைப் பற்றியதாகும்.

"காம்பனைய தோளார் முகத்தைக் கலைமதிஎன்று
ஆம்பல் பகலே அரும்பவிழ்க்கும்– பாம்பைத்
திருப்பாதா ளீசா திரிபுரம் மூன்றட்ட
பொருப்பாதா ளீசர் பொழுது"

*(பாம்பை என்ற தனிச் சொல் பாமணியைக் குறித்ததால், இப்பாட்டு பாடல் பெற்ற பாமணிக்கு உரியதாகும்)*

*தமிழ்த் தொடர்பும் தெய்வ அருளும் மிக்க திருப்பாதாளேச்சு வரர் திருக்கோயில், வேண்டுவார்க்கு வேண்டுவன நல்கும் திருக்கோயிலாகும்.*

## துணைநூற்பட்டியல்

1. அருணாசலம்.ப (1979)- சைவ சமயம் ஓர் அறிமுகம், மேற்கு இராமவர்மபுரம், நாகர்கோயில்

2. இராசமாணிக்கம் மா. (1959) சைவ சமயம் செல்வி பதிப்பகம் காரைக்குடி

3. உமாமகேசுவரி. பு.பா.(1990) நெல்லையப்பர் கோயில். தி.தெ.சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் சென்னை-18

4. கந்தையாபிள்ளை (1941) சைவசமய சார சங்கிரகம், மலாயன் அச்சுக்கூடம், கோலாலம்பூர்

5. கணபதி ஸ்தபதி.வை. (1978) சிற்பச்செந்நூல், தொழில் நுட்பக்கல்வி இயக்ககம் சென்னை-600 025

6. கதிரைவேற்பிள்ளை.நா.(ஆ.இ) சுப்பிரமணிய பராக்கிரமம், வித்தியா சாகர அச்சுக்கூடம் சென்னை

7. கணேசமூர்த்தி. டி.பி. (1959) ஆலய விக்கிரக நிர்மாண ஆயாதி சிற்பஇரகசியம், மூர்த்தி சில்பகலா சாலை சென்னை-3

8. கைலாசநாதருக்குருக்கள். கா. (1983) சைவத்திருக்கோயில் கிரியைநெறி கலா நிலையம் 175, செட்டியார் தெரு, கொழும்பு

9. கோபாலையர்.தி.வே (1971) இலக்கண விளக்கம் சொல்லதிகாரம் சர்வதி மகால் தஞ்சாவூர்

10. சந்திரமூர்த்தி மா. (1988) இலுப்பைக்குடிக்கோயில் மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்

11. மேலது (1988) மாத்தூர் கோயில், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்

12. மேலது (1994) சூரக்குடிக்கோயில் மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்

13. மேலது (1996) வயிரவன் கோயில் மணிவாகர் பதிப்பகம் சிதம்பரம்

14. சிங்காரவேலு முதலியார். ஆ. (1981) அபிதான சிந்தாமணி ஏசியன் எடுகேஷனல் சர்வீசஸ் நீயுடெல்லி.

15. சிவகுருநாதபிள்ளை.மா. (1991) சிவவடிவங்கள் தமிழ்ப்பல்கலைக் கழகம் தஞ்சாவூர்

16. சுவாமிநாத சிவாச்சாசாரியார் (1960) ஆகம வசன பூஷணம் தென்னிந்திய அர்ச்சகர்சங்கம் சென்னை

17. சேதுராமன். என் (1976) அருளுடைச் சோழமண்டலம் ராமன் அண்ட் ராமன் கும்பகோணம்

18. சோமலெ (1981) தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும் நேஷனல் புக் டிரஸ்ட் இந்தியா

19. தண்டபாணி தேசிகர் ச. (1992) கணபதி திருவாவடுதுறை ஆதினம் திருவாவடுதுறை மூன்றாம் பதிப்பு

20. தேனப்பன்.வ. (1990) ஒன்பது நகரக்கோயில்கள் தேன் வள்ளியம்மை பதிப்பகம் தேவகோட்டை

21. நாச்சம்மை சிவராமன் (1990) ஆலயவழிபாடு பாலை நிலையம் காரைக்குடி

22. பாலசுப்பிரமணியம் எஸ்.ஆர். (1966) சோழர் கலைப்பாணி பாரிநிலையம் சென்னை-1

23. புசுண்டமகரிஷி (ஆ.இ) காக்கையர் சிற்பம் சண்முகானந்தா புக்டிப்போ சென்னை-112

24. மீனாட்சி சுந்தரம் டி.சி. (1996) தையல் நாயகிமாலை பி.அழகாபுரி

25. வேங்கடசாமி சினி (1998) சாசநச் செய்யும் மஞ்சரி பாரிநிலையம் சென்னை-1

26. ஜயசெந்தில் நாதன் பு.மா. (1995) திருமுறைத்தலங்கள் 41 உஸ்மான் ரோடு தமிழ் நிலையம் சென்னை-17

27. ஸ்ரீ சந்திரசேகர சரஸ்வதி (1976) தெய்வத்தின்குரல் முதற்பகுதி வானதி பதிப்பகம் சென்னை

28. மேலது (1980) தெய்வத்தின் குரல் இரண்டாம்பாகம் வானதிபதிப்பகம் சென்னை

29. மேலது (1989) தெய்வத்தின் குரல் ஐந்தாம்பகுதி வானதி பதிப்பகம் சென்னை

30. ஸ்ரீனிவாசன் பி.ஆர் (1959) நாம் வணங்கும் தெய்வங்கள் இளங்கோ பதிப்பகம் 41, உஸ்மான்ரோடு சென்னை-17.

31. மேலது (1965) கோயிற்கலையும் சிற்பங்களும் கலைஞன் பதிப்பகம் சென்னை.

32. ஸ்ரீ தேவநாதாச்சாரியார் (1989) சிற்பரத்தினம் சரஸ்வதி மகால் நூலகம் தஞ்சாவூர்.

33. ஜானகி எஸ்.எஸ். (1988) கொடிமரம் கே.எஸ்.ரிசர்ச் இன்ஸ்டியூர் சென்னை.

## ஆங்கில நூல்கள்

34. Copinatha Rao T.A. (1968) Elements of Hindu Iconography vol part II Motihal Banarsidass Banhalow Road Delhi-7

ஜெயதுர்கா

ஸ்ரீ துர்க்கைச் சித்தர் அருளிய

# ஸ்வர்ணாகர்ஷண பைரவ அஷ்டகம்

தனந்தரும் வயிரவன் தளிரடி பணிந்திடின்
 தளர்வுகள் தீர்ந்து விடும்
மனந்திறந் தவன்பதம் மலரிட்டு வாழ்த்திடின்
 மகிழ்வுகள் வந்து விடும்
சினந்தவிர்த் தன்னையின் சின்மயப் புன்னகை
 சிந்தையில் ஏற்றவனே
தனக்கிலை யீடு யாருமே என்பான்
 தனமழை பெய்திடுவான். 1

வாழ்வினில் வளந்தர வையகம் நடந்தான்
 வாரியே வழங்கிடுவான்
தாழ்வுகள் தீர்ந்திட தளர்வுகள் மறைந்திட
 தானென வந்திடுவான்
காழ்ப்புகள் தீர்த்தான் கானகம் நின்றான்
 காவலாய் வந்திடுவான்
தனக்கிலை யீடு யாருமே என்பான்
 தனமழை பெய்திடுவான். 2

முழுநில வதனில் முறையொடு பூஜைகள்
 முடித்திட அருளிடுவான்
உழுதவன் விதைப்பான் உடமைகள் காப்பான்
 உயர்வுறச் செய்திடுவான்
முழுமலர்த் தாமரை மாலையை ஜெபித்து
 முடியினில் சூடிடுவான்
தனக்கிலை யீடுயாருமே யென்பான்
 தனமழை பெய்திடுவான். 3

நான்மறை ஓதுவார் நடுவினில் இருப்பான்
 நான்முகன் நானென்பான்
தேனினில் பழத்தைச் சேர்த்தவன் ருசிப்பான்
 தேவைகள் நிறைந்திடுவான்

வான்மழை எனவே வளங்களைப் பொழிவான்
வாழ்ந்திட வாழ்ந்திடுவான்
தனக்கிலை ஈடுயாருமே என்பான்
தனமழை பெய்திடுவான். 4

பூதங்கள் யாவும் தனக்குள்ளே வைப்பான்
பூரணன் நான் என்பான்
நாதங்கள் ஒலிக்கும் நால்வகை மணிகளை
நாணினில் கட்டிடுவான்
காதங்கள் கடந்து கட்டிடும் மாயம்
யாவையும் போக்கிடு வான்
தனக்கிலை ஈடுயாருமே என்பான்
தனமழை பெய்திடுவான். 5

பொழில்களில் மணப்பான் பூசைகள் ஏற்பான்
பொன்குடம் ஏந்திடுவான்
கழல்களில் தண்டை கைகளில் மணியணி
கனகனாய் இருந்திடுவான்
நிழல்தரும் கற்பகம் நினைத்திட பொழிந்திடும்
நின்மலன் நானென்பான்
தனக்கிலை ஈடுயாருமே என்பான்
தனமழை பெய்திடுவான். 6

சதுர்முகன் ஆணவத் தலையினைக் கொய்தான்
சத்தொடு சித்தானான்
புதரினில் பாம்பைத் தலையினில் வைத்தான்
புண்ணியம் செய்யென்றான்
பதரினைக் குவித்துச் செம்மினை எரித்தான்
பசும்பொன் இதுவென்றான்
தனக்கிலை ஈடுயாருமே என்பான்
தனமழை பெய்திடுவான். 7

ஜெய ஜெய வடுக நாதனே சரணம்
வந்தருள் செய்திடுவாய்
ஜெய ஜெய சேத்திர பாலனே சரணம்
ஜெயங்களைத் தந்திடுவாய்
ஜெய ஜெய வயிரவா செகம் புகழ் தேவா
செல்வங்கள் தந்திடுவாய்
தனக்கிலை ஈடுயாருமே என்பான்
தனமழை பெய்திடுவான். 8


N
உலகம்பட்டி
கொப்பனாபட்டி
குழிபிறை
பணையப்பட்டி
நச்சாந்துபட்டி
வலையபட்டி
பொன்புதுபட்டி
பூலாங்குறிச்சி
மேலைச்சிவபுரி
வேகுப்பட்டி
நெய்க்குளம்
கடியாபட்டி
ராமவரம்
வேந்தன்பட்டி
செவ்வூர்
திருமயம்
அரிமளம்
நெற்குப்பை
நேமத்தான்பட்டி
ஆதெக்கூர்
மகிபாலன்பட்டி
தொத்தமங்கலம்
விராமதி
கொடைக்கமிபுரம்
மதுரையிலிருந்து
தேமம்
சொக்கலிங்கம் புதூர்
பள்ளத்தூர்
தேனிபட்டி
திருப்பத்தூர்
வயிரவன்கோவில்
பின்னையார்பட்டி
சிராவயல்
கோட்டையூர்
பட்டமங்கலம்
நாச்சியாபுரம்
செக்காலை
புதுவயல்
திருக்கோஷ்டியூர்
கருங்குளம்
மானகிரி
காரைக்குடி
அலவாக்கோட்டை
சொக்கநாதபுரம்
மாற்றூர்
மதகுபட்டி
செம்பனூர்
அரியக்குடி
இலுப்பக்குடி
கீழப்பூங்குடி
கல்லல்
அமராவதிபுதூர்
பாகனேரி
பனங்குடி
புகைவண்டி வழித்தடம்
சண்முகநாதபுரம்
ஒக்கூர்
நடராசபுரம்
அரண்மனை சிறுவயல்
சோழபுரம்
காளையார்மங்கலம்
கல்லுப்பட்டி
ராமேஸ்வரம்
தேவகோட்டை
வெற்றியூர்
சக்கந்தி
சிவகங்கை
நாட்டரசன்கோட்டை